KALKI 16.7.95 ரூ. 3.00

# கல்கி



# அபாயம் விளைவிக்கும் அணு உலைகள்!

பம்பாயில் உள்ள தாராபூர் அணு உலைக் கூடத்திலிருந்து, ரேடியோ ஆக்டிவ் கழிவு நீர் வெளியேற்றப்பட்டு, மழைத் தண்ணீர் போகும் பாதாளச் சாக்கடை வழியாக, பக்கத்தில் உள்ள இவாலி கிராமத்துக்குள் விடப்பட்டிருக்கிறது.

இவாலி கிராமத்து மக்கள் இதனால் மிகவும் அரண்டு போயிருக்கிறார்கள். அவர்களுடைய ஆடு, மாடுகள், நாய்கள், பறவைகள் எல்லாம் இறந்தே போய் விட்டன.

சாதாரணமாக ஒரு நியூக்ளியர் ஆலையின் வயது 25–30 வருடங்கள்தான். அதற்குப் பிறகு, மனிதர்கள் மாதிரி அதற்கும் ரிடையர்மென்ட் கொடுத்துவிட வேண்டும்.

நியூக்ளியர் கழிவுநீர் என்றாலும், அதை அலட்சியப் படுத்திவிட முடியாது. புற்றுநோய், சருமநோய், குறை உறுப்புகளுடன் பிறப்பு போன்ற பாதிப்புகள் உண்டாக்கும் வல்லமை அதற்கு உண்டு.

இது பற்றி, சுமார் ஏழு ஆண்டுகளாகத் தொடர்ந்து அணு அபாய எதிர்ப்பு இயக்கம் நடத்தி வந்த ரமேஷ் விவரித்தார். இவர் தற்போது யுஎன்ஐயின் முக்கிய நிருபர்:

**• பத்தாண்டுகளாகச் செயல்படும் கல்பாக்கம் அணு உலை : இருபத்தைந்தாம் வருடத்தில் என்ன ஆகுமோ...?**



தாராபூர் ஆலை 61–62ல் துவங்கப்பட்டது. இப்போது என்ரான் பிரச்னையில் சிக்கியிருக்கும் அமெரிக்க பெக்டெல் நிறுவனம்தான் இதை அமைத்துத் தந்தார்கள். போக்ரானில் நாம் பரீட்சார்த்த சோதனை செய்ததும், டாடா சொல்லி விட்டுப் போய் விட்டார்கள்.

'நியூக்ளியர் வேஸ்ட்'டை முறையாக மழுங்கடித்து வெளியேற்றும் தொழில்நுட்பம் நம்மிடம் இல்லை. அணு ஆயுதத் தயாரிப்புக்கான ப்ளூடோனியத்தை அதிலிருந்து உருவாக்க முடியும். இது எல்லாருக்கும் தெரிந்த விஷயம்தான். எந்த நாடும் இந்த வாய்ப்பை நழுவ விட விரும்புவதில்லை.

ஆலையின் சில பகுதிகளுக்குள் போகக்கூட முடியாது, ரேடியோ ஆக்டிவ் அபாயம் காரணமாக. ஆனால், அடுத்துள்ள கிராமங்களில் வசிக்கும் அப்பாவி ஆதிவாசிகளை கான்ட்ராக்ட் லேபர் அடிப்படையில் வேலைக்கு வைத்துக் கொண்டு, அபாயகரமான பகுதிகளுக்கு அவர்களை அனுப்பி, வேலை வாங்குவதுண்டு. இவர்கள் பாதிப்பு நிலையை ஓரளவு நெருங்கியதும், உடனே வேறு பகுதிக்கு அனுப்பி விடுவார்களா! பீகாரில் உள்ள யுரேனியச் சுரங்கம், ஹைதராபாத்திலுள்ள நியூக்ளியர் ஃப்யூயல் காம்ப்ளெக்ஸ் என்று எல்லா இடங்களிலுமே இதுதான் வழக்கம்.

இதை எல்லாம், பிரஃபுல் மித்வாய் என்ற சீனியர் நிருபர் டைம்ஸ் அஃப் இந்தியாவில் தொடர் கட்டுரைகளாக எழுதினார். அப்போது சுமார் ஏழு வருடங்களுக்கு நான் அவருடன் கூடவே இந்த அணு ஆலைக்குச் சென்று பார்த்து வந்திருக்கிறேன். சி.ஏ.ஜி. ரிப்போர்ட்டுகளும் வந்து, இந்த அணு உலையின் செயல் முறையை அக்குவேறு ஆணிவேறாக அலசியிருக்கிறது. ஆனால் அவர்கள் இதை எல்லாம் கண்டு கொள்ளாமல் இருந்து விடுவார்கள்!

கல்பாக்கத்தைப் பொறுத்தவரை, பத்து வருடம்தான் ஆகிறது. இனிமேல்தான் அதன் லட்சணம் தெரியப்போகிறது. வருடங்கள் ஆக ஆகத்தான் இவற்றின், அபாயம் வெளிப்பட ஆரம்பிக்கும்.

ரேடியோ ஆக்டிவ் பகுதிகளோடு தொடர்ந்து தொடர்புடைய தண்ணீர் அல்லது பிற பொருட்கள் வெளியேறுகிறபோது அவற்றை வேஸ்ட் என்கிறார்கள். உடைகள், கையுறைகள்கூட இதற்குக் காரணிகள். வேஸ்ட்டை முழுக்க முழுக்கச் சக்தி இழக்கச் செய்யும் அறிவியல் தொழில் நுட்பம் இன்னமும் அறியப்படாமலே இருக்கிறது.

• அடமிக் எனர்ஜி ரெகுலேடரி போர்டில், அங்குள்ள விஞ்ஞானிகள் மட்டுமே உறுப்பினராக இருக்கக் கூடாது. அந்த வாரியத்தை ஒரு சிவில் அமைப்பாக மாற்றி, ஜனநாயகக் கட்டுப் பாட்டுக்குள் கொண்டுவர வேண்டும். அதில் விவரமறிந்த மருத்துவர்களும், நாட்டு நலனில் உண்மையான அக்கறை கொண்ட சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர்களும், விருப்பு வெறுப்பு இல்லாத விஞ்ஞானிகளும் அங்கம் வகிக்க வேண்டும். அது ஒரு பொது மக்கள் குழுவாக இருக்க வேண்டும்.

• விஞ்ஞான முன்னேற்றத்தின் காட்சிப் பொருள்கள் என்று இந்த அணு உலைகளைப் பெருமையோடு சுட்டிக்காட்டும் ஆபத்து நிறைந்த போக்கு, தட்டிக் கேட்கப்படும் சூழ்நிலை உருவாக வேண்டும். படித்தவர்கள், அறிஞர்கள் பொதுமக்களிடையே இதற்கான விழிப்புணர்வு உண்டாக வேண்டும்.

— சாருகேசி



# காற்றாடி ஆசை!

**கபில்தேவ் பேட்டி**

பிரபலங்களைக் கூப்பிட்டு பாணா இளப்புவதே பெப்ஸிகாரர் களுக்கு சோலியாகப் போய் விட்டது.

முன்பு ஐஸ்வர்யா ராய் வந்து ஒரு கலக்கு கலக் கிப் போக, மெட்ராஸில் பலருக்கு ஈஸ்னோஃபீலியா வந்துவிட்டது. இப்போது கபில்தேவ்.

விஷயம், ரொம்ப சாதா. பெப்ஸி நிறுவனம் பாரத் பெட்ரோலி யத்துடன் செய்து கொண்டிருக்கிற ஒப்பந்தத்தின்படி இனி பெட் ரோல் பங்க்குகளில் பெப்ஸி கிடைக்கும்.

பெட்ரோலுக்கு பதில் பெப்ஸி ஊற்றினால் வண்டி ஓடுமா என்று அரவக் குறிச்சிப்பட்டி அசோக்ராஜா தராசாருக்குக் கடிதம் எழுதக் கை பரபரக்குமுன் விஷயத்தை விளக்கி விடுகிறோம்.

பெப்ஸி, வண்டிக்கல்ல; ஓட்டுபவர்களுக்குத்தான். சும்மா இல்லை; காசுக்குத்தான்! (அஸ்க் புஸ்க்!)

அதற்கான தொடக்க விழாவுக்குத்தான் கபில் வந்திருந்தார். ஜீன்ஜும் டெனிம் ஷர்டுமாக அன்றுகாலை பத்து முப்பதுக்கு (குறிப்பிட்ட நேரம்!) கபில் வந்திறங்கியதல்ல ஆச்சர்யம்; குறித்த நேரத்தில் இந்தியன் ஏர்லைன்ஸ் விமானம் அவரைச் சுமந்து வந்ததே, அது!

தி.நகர் வெங்கட்நாராயணா ரோடில் சூரிய பகவான் வெகு உக்கிரத் துடன் புரட்சி பண்ணிக் கொண்டிருக்க, காரிலிருந்து இறங்கிய கபில், அடிக்கடி கர்ச்சிப் நாடவேண்டி இருந்தது!

ஒரு பெப்ஸி குடிப்பார், 'ய ஹீ ஹை ரைட் சாய்ஸ் பேபி' என்பார், வந்த வேலை பற்றி ஒரு சில வார்த் தைகள் உதிர்ப்பார் என்று பார்த்தால் – மூச்! ஆட்டோ கிராஃப் போட்டுக் கொடுத்து, போயே விட்டார்!

அதற்குள் அவரை ஓரம் கட்டி கல்கிக்காக ஒரு அமீபா சைஸ் பேட்டி எடுத்தோம்:

''கிரிக்கெட்டி

''அஸாருதி னோடு என்ன லடாய்? ஏதோ அறிக்கைப் போர் நடந்து கொண்டிருக்கிறது போல் இருக்கிறதே, உங்கள் இருவருக்கும்?''

• பெப்ஸி விழாவுக்கு வந்த பாப்பாவைக் கொஞ்சுகிறார்...



**யார் இவர்? எதற்காக இத்தனை அவசரமாகப் போகிறார்? 55 - ஆம் பக்கத்துக்கு வந்து பாருங்கள் தெரியும்!**



படம் : ராஜு

விருந்து ஓய்வு பெற்றதும் ஸ்குவாஷ், கோல்ஃப், கால்பந்து, நீச்சல் என்று பல விளையாட்டுகளில் ஆர்வம் காட்டுகிறீர்களே எது ரொம்பப் பிடித்திருக்கிறது?''

''எதைக் குறிப்பிடுவது? எல்லாமேதான்! சொல்லப் போனால் காத்தாடி விடக்கூட ரொம்ப இஷ்டம்தான்!''

வெற்றுக் கரங்களால் மாஞ்சா நூல் இழுத்தார். முகத்தில் ஏக மலர்ச்சி. அடுத்த கேள்வியில் மலர்ச்சி போய் விட்டது.

''அஸாருதினோடு என்ன லடாய்? ஏதோ அறிக்கைப் போர் நடந்து கொண்டிருக்கிறது போல் இருக்கிறதே, உங்கள் இருவருக்கும்?''

''சேச்சே! சர்ச்சையெல்லாம் இல்லை. உலகக் கோப்பைப் பந்தயங்களுக்காக இந்தியா தேர்ந்தெடுத்திருக்கிற மைதானங்கள் சரியில்லை என்று அஸார், 'ப்ரெஸ்'ஸைக் கூப்பிட்டுச் சொல்லியிருக்கிறார். இது மாதிரி- ஒரு வீரரின் கருத்தை பத்திரிகையாளர்களிடம் முதலில் சொல்வதில் எனக்கு உடன்பாடில்லை. கிரிக்கெட் போர்டிடம் சொல்லியிருக்க வேண்டியதுதான் நியாயம். அதைத்தான் சுட்டிக்காட்டினேனே தவிர, வேறு பிரச்னை ஏதுமில்லை.''

''தற்போது இந்திய கிரிக்கெட் குழு மானேஜராக வடேகர் தொடர்ந்து இருப்பதில் உங்களுக்கு உடன்பாடுதானா? தவிர சச்சின்...''

''வெயிட், வெயிட்! நான்தான் ஓய்வு பெற்று விட்டேனே! எதற்காக நான் கருத்துச் சொல்ல வேண்டும்?''

''நல்லது. வருடத்தில் பல நாட்கள் உங்களைப் பிரிந்து இருப்பதாக உங்கள் மனைவி பேட்டிகளில் ரொம்ப வருத்தப்பட்டிருக்கிறாரே!''

''இப்போது ரொம்ப சந்தோஷப்பட்டுக் கொண்டு இருக்கிறாள்.''

''நிறைய தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் பங்கேற்கிறீர்கள் போலிருக்கிறதே!''

''சேச்சே! நிறைய தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் பார்க்கிறேன், அவ்வளவுதான்!''

''வேகப் பந்து வீச்சாளர்களுக்குப் பயிற்சி கொடுக்க மையம் ஏதோ தொடங்கப் போவதாகப் பேச்சு வந்ததே?''

''ஐடியா இருக்கிறது. காலம் கனியவில்லை. பார்க்கலாம்!''

— குல்லூ

படங்கள் : கேமரா திருஞானம்

---



''சே! எந்த விஷயத்துக்குத்தான் லஞ்சம் கேட்கணும்கற வெவஸ்தையே இல்லாம போச்சு!''

''என்னாச்சு?''

''தன்னுடைய வீட்டுல திருடினவன்கிட்டேயே உன்னைக் கைது செய்யாம இருக்கணும்னா எனக்குப் பத்தாயிரம் ரூபாய் லஞ்சம் தரணும்னு சொல்றாராம் நம்ம ஊரு இன்ஸ்பெக்டர்!''

- சேரை முத்துமணாளன்



# சவுத் ஈஸ்ட் பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட 'நிதி' நிறுவனம். துவக்கம் - 1989.
கார்த்திக் அபார்ட்மெண்ட்ஸ், அடித்தளம், 6 செயிண்ட் மேரீஸ் சாலை, மந்தைவெளி,
சென்னை - 28. போன் : 49 40 255.
எழும்பூர் கிளை - 76, எழும்பூர் நெடுஞ்சாலை, சென்னை - 8.

| பிக்சட் டிபாசிட் திட்டம் (மாதங்கள்) | | | | | 'உதவும் கரங்கள்' டிபாசிட் திட்டம் (மாதங்கள்) | | | இத்திட்டம் முதியோர், உடல் ஊனமுற்றோர், விதவையர் ஆகியோருக்கு மட்டும். ஆண்டுக்கு ஒரு முறை வட்டி வாங்கினால் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 12 | 24 | 36 | 48 | 60 | 12 | 24 | 36 | |
| 17% | 18% | 19% | 19.5% | 20% | 20% | 20.5% | 21.0% | 21% |

| 'குத்து விளக்கு' மறு முதலீட்டுத் திட்டம் -1 | | | 'குத்து விளக்கு' மறு முதலீட்டுத் திட்டம் - 2 | | |
|---|---|---|---|---|---|
| 36 மாதங்கள் | 1. Rs. 2,925/- | Rs. 5,000/- | 252 மாதங்கள் (21 வருடங்கள்) | 1. Rs. 345/- | Rs. 20,000/- |
| | 2. மற்றும் அதன் பெருக்கில் | | | 2. மற்றும் அதன் பெருக்கில் | |
| | 3. Rs. 14,625/- | Rs. 25,000/- | | 3. Rs. 1,725/- | Rs. 1,00,000/- |

| 'கலங்கரை விளக்கம்' மறு முதலீட்டுத் திட்டம் - 1 (மாதங்கள்) | | | | | | 'கலங்கரை விளக்கம்' மறு முதலீட்டுத் திட்டம் - 2 | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| டிபாசிட் | 12 | 24 | 36 | 45 | 60 | டிபாசிட் | 120 மாதங்கள் | 180 மாதங்கள் |
| 1,000/- | 1,184/- | 1,430/- | 1,735/- | 2,000/- | 2,535/- | 2,500/- | 16,500/- | 45,500/- |

## 'கல்பதரு' திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு முடிவில் பெறும் தொகை | 10-ம் ஆண்டு முடிவில் பெறும் தொகை | 15-ம் ஆண்டு முடிவில் பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs. 6,320 | Rs. 6,000/- | Rs. 6,000/- | Rs. 56,300/- |

ரெக்கரிங் டிபாசிட் திட்டம் மாதாந்திர வட்டி 19%

## 'காமதேனு' மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 30 ஆண்டுகள் | 10-ம் ஆண்டு முடிவில் நீங்கள் பெறும் தொகை | மேலும் 20 ஆண்டுகள் கழித்து நீங்கள் பெறும் தொகை |
|---|---|---|
| Rs. 12,500/- | Rs. 12,500/- | இருபத்தைந்து லட்சம் |
| Rs. 25,000/- | Rs. 25,000/- | ஐம்பது லட்சம் |
| Rs. 50,000/- | Rs. 50,000/- | ஒரு கோடி |

தங்க நகைக் கடன் ஒரு கிராமுக்கு ரூ. 300/-
மதிப்பீட்டுக் கட்டணம் இல்லை.
ஆர்.டி. தேவை இல்லை.
உச்சவரம்பு இல்லை.
வட்டி வரி இல்லை.

| | | |
|---|---|---|
| ஏ.வி.இராமநாதன்<br>இயக்குனர்<br>ஆடிட்டர் | எம். பி. பாண்டுரங்கம்<br>துணைத் தலைவர் மற்றும்<br>தலைமை நிர்வாகி | பி. கே. சாமிநாதன்,<br>தலைவர், ஓய்வு பெற்ற<br>மாநில அரசு துணைச்<br>செயலாளர் |

| | | |
|---|---|---|
| நேரம் : 9 - 12.30 & 3 - 5.30 | பங்குத் தொகை ரூ. 1/-தான் | மாதத்தின் கடைசி நாள் வேலை நாளாகும். |

(வேறு வழியன்றி...)

# சிரித்து வாழ வேண்டும்!

— ஆ...













இந்தா... நீயும்
சினிமா பார்த்துட்டு
வந்து மாதிரி
எல்லாருக்கும்
கதையைச்
சொல்லிடு!


என்ன தலைவரே!
அந்த குழந்தைக்கு
'தக்காளி'ன்னு
பேர்
வெச்சுட்டீங்க!
அதுங்கதானே 'ஒஸ்தி'
பேரா இருக்கணும்னு
சொன்னாங்க...


திருப்பதில்லாம் இல்லே... நம்ம
அயூரண்தான்! இன்னும் 4 மாசம்
முடியே வெட்டவேண்டாம் பாருங்க!
மாசம் 100 ரூபா மிச்சம்
மொத்தம் 400 ரூபா!


என்னை மாதிரி 10 மாச இடைவெளில
குழந்தை பெத்துக்கோ! முதல் பையன்
புக்ஸ் யூனிஃபார்ம் அடுத்த வருஷம்
இரண்டாவது பையனுக்கு!
அதுக்கடுத்த வருஷம் இரண்டாவது
பையன் புக்ஸ் யூனிஃபார்ம்
மூணாவது பையனுக்கு...
ஸ்கூல் செலவு
குறைஞ்சிடும்......!

உங்களின் முதலீடு வளர்ந்து உன்னத பலன்களைத் தர
நம்பிக்கையான நிறுவனம்




# சினேகம் ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

## சினேகம் குருப் நிறுவனங்கள்

உங்கள் முதலீட்டுக்கு

**24%**

வருட வட்டி

**+ 3%**

ஊக்கத் தொகை
வழங்கப்படுகிறது

*வட்டிக்கும் அதன் தொகைக்கும்
பின் தேதியிட்ட காசோலைகள் முன்னதாகவே
வழங்கப்படும்*

**விழாக்கால சிறப்புப் பரிசுகள்**

ரூ. 10,000 ஒரு வருட முதலீட்டுக்கு
10 கிராம் வெள்ளிக் காசு

ரூ.10,000 மூன்று வருட முதலீட்டுக்கு
1 கிராம் தங்கக் காசு

உங்கள் முதலீடு
ரூ. 10,000
**36** மாதங்களில்
ரூ. 20,000
ஆகிறது

தலைமை அலுவலகம்
31, முதல் அவென்யூ, அசோக் நகர், சென்னை - 600 083.
போன் : 4825105, 4825566 Fax : 4823607

*கிளைகள்*

நங்கநல்லூர் : 18, M.G.R. ரோடு, ரங்கா தியேட்டர் எதிரில், சென்னை - 600 061.
அண்ணா நகர் : 113, இரண்டாவது தளம், 3வது அவென்யூ, கந்தசாமி நாயுடு கல்லூரி எதிரில், சென்னை - 600 040.
மைலாப்பூர் : 2, பிக்னிக் பிளாசா, இராமகிருஷ்ணா மடம் சாலை, சென்னை - 600 004.
சேலம் I : 71 G. தூமங்கலம் மெயின் ரோடு, (தியாகராஜா பாலிடெக்னிக் அருகில்), சேலம் - 636 005. போன் : 446961
சேலம் II : 137, சாந்தம் காம்ப்ளக்ஸ், சாரதா காலேஜ் ரோடு, சேலம் - 636 016. போன் : 448872
பாண்டிச்சேரி : 161, மிஷன் தெரு, பாண்டிச்சேரி - 605 001. போன் : 43275.
கோவை : 101, இராஜராஜேஸ்வரி டவர்ஸ், காந்தி புரம் டவுன் பஸ் ஸ்டாண்ட் எதிரில், கோவை - 641 018.

*விரைவில்* தி. நகர், திருச்சி, மதுரை, காரைக்குடி

தலைவருடைய சிரிப்பே தனி அழகுதான்....

புலிகளுக்கு ஆதரவு

பிரிவினை வாதம்

வை.கோ



1995 ஜூலை 16
யுவ ஆனி 32
மலர் : 53
இதழ் : 50

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.



## வசீகர வை. கோ.

ம.தி.மு.க.வின் முதல் மாநில மாநாடு, திருச்சியில் வெற்றிகரமாக நடந்து முடிந்திருக்கிறது. ஏராளமான இளைஞர்களை அணிதிரட்டி பிரமிக்க வைத்ததற் காகவும், அவர்கள் மைல் கணக்கில் விடிய விடிய ஊர்வலமாக வந்து அசத்தியதற் காகவும், மாநாட்டில் பல முக்கியமான பிரச்னைகளை அலசியதற்காகவும், மத்திய, மாநில அரசுகளுக்கு எதிராக எதிர்ப்புப் பணியைச் செவ்வனே ஆற்றியதற்காகவும், நல்ல பல தீர்மானங்களை நிறைவேற்றியதற்காகவும் ம.தி.மு.க. தலைவர் வை.கோ. பாராட்டுக்குரியவராகிறார்.

இன்றைய இளைஞர்கள் மரபு வழி வந்துள்ள பல கட்சிகளிடமும் அவற்றின் தலைவர்களிடமும் ஏமாற்றமடைந்து, புதிய இளம் தலைமையை நாடுகிறார்கள் என்பதற்கு ம.தி.மு.க. மாநாடு எடுத்துக்காட்டு. ஆனால் தம்மை நம்பி வந்து குவிந்த இளைஞர் சமுதாயத்துக்கு வை.கோ. சரியான வழிகாட்டியிருக்கிறாரா? பல அம்சங்களில் நல்வழி காட்டினாலும் இரண்டு அம்சங்களில் ஆபத்தான வழிகாட்டியிருக்கிறார்.

ஈழத் தமிழர்களிடம் அனுதாபம் காட்டுவது வேறு; தனித்தமிழ் ஈழத்துக்கும் அதற்காகப் போராடும் விடுதலைப் புலிகளுக்கும் ஆதரவு தருவது என்பது வேறு.

ஈழத் தமிழர்கள் புலிகள் மட்டுமல்ல; அவர்கள் போக்கு பிடிக்காத பல்லாயிரக்கணக்கானோரும் உள்ளனர். எனவே ஜனநாயக முறையில் ஈழத் தமிழர் பிரச்னைக்குத் தீர்வு காண வேண்டும்; பேச்சு வார்த்தைகள் நடத்த வேண்டும்; அமைதி திரும்ப வேண்டும் என்றால் சரி. தீர்வு என்பது, தனித் தமிழ் ஈழமாகவும் இருக்கலாம்; சுயாட்சி உரிமையாகவும் இருக்கலாம்; அல்லது இரு தரப்பினருக்கும் ஒப்புதலான வேறு ஒரு ஜனநாயக அமைப்பாகவும் இருக்கலாம். எது என்பதை அங்குள்ள மக்கள் சுதந்திரமாகத் தீர்மானிக்க - யாருடைய வற்புறுத்தலும் தலையீடும் இன்றித் தீர்மானிக்க - அனுமதிக்கப்பட வேண்டும். இதை விடுத்து 'தனித்தமிழ் ஈழமே ஒரே தீர்வு; விடுதலைப் புலிகளுக்கு ஆதரவு' என்னும்போது வை.கோவின் தமிழக மாநில சுயாட்சி கோஷம் கூட பிரிவினைச் சாயம் பூசிக் கொள்கிறது.

வசீகரமான, ஆனால் ஆபத்தான இந்த காட்டுப் பாதையில் திசை திரும்பாமல், இளைஞர்கள் ராஜபாட்டையையே தேர்ந்தெடுக்க வேண்டும்.

“

**தமிழக அரசின் சார்பிலேயே (அல்லது ஆளும் கட்சி சார்பிலே) வன்முறை கட்டவிழ்த்து விடப்படும் போது, சமூக விரோத சக்திகள் மேலும் துணிச்சல் பெறுவதில் வியப்பில்லை.**

”




## குண்டு கலாசாரம்

தமிழகத்தின் வன்முறைக் கலாசாரம் குண்டு கலாசாரமாக உருமாறி வருகிறது. நாகூரில் இந்து முன்னணித் தலைவர் முத்துகிருஷ்ணனின் மனைவி தங்கம், பார்சல் குண்டு ஒன்றுக்குப் பலியாகியிருக்கிறார். அதே போன்ற இன்னொரு பார்சல் குண்டு, மாயூரம் ஜெகவீரபாண்டியனையும் தீர்த்துக் கட்ட அனுப்பப்பட்டபோதிலும் அவர் நல்ல காலமாக முன்னெச்சரிக்கையோடு செயல்பட்டு உயிர் தப்பியிருக்கிறார்.

இந்த அக்கிரமங்களைச் செய்பவர்கள் யாராயிருப்பினும் அவர்கள் கண்டனத்துக்கும் தண்டனைக்கும் உரியவர்கள் என்பதில் இரண்டாவது கருத்து இல்லை. ஆனால் முதல் குற்றவாளி, தமிழக அரசும் தமிழக போலீஸூம்தான்!

தமிழக அரசின் சார்பிலேயே (அல்லது ஆளும் கட்சி சார்பிலே) வன்முறை கட்டவிழ்த்து விடப்படும் போது, சமூக விரோத சக்திகள் மேலும் துணிச்சல் பெறுவதில் வியப்பில்லை.

ஆர்.எஸ்.எஸ். அலுவலக கட்டடத்தில் குண்டு வெடிப்பு; இந்து முன்னணித் தலைவர் தாக்கப்பட்டது; வழக்கறிஞர்களின் கை கால்கள் முறிக்கப்பட்டது என்று இப்படி ஏராளமான வன்முறைச் சம்பவங்களில், ஒன்றில் கூட போலீஸாரால் குற்றவாளிகளைப் பிடிக்க முடியவில்லை (அல்லது பிடிக்க வேண்டாமெனத் தடுக்கப்படுகிறார்கள்) என்னும் போது வன்முறையாளர்கள் நெஞ்சு நிமிர்ந்து ஏளனமாய்ச் சிரிக்கவே செய்வார்கள். அந்தச் சிரிப்பை முதல்வர் ரசிக்கிறாரோ, வெறுக்கிறாரோ; மக்கள் வயிறு எரிகிறார்கள்.

ஒரு பெண்ணின் கருவகத்தில் (ovary) உருவாகும் கரு முட்டை பழுத்து வெளிப்பட்டு, கரு இணைப்புக் குழாய் (fallopian tube) வழியே சென்று கருப்பையை அடைகிறது. கரு இணைப்புக் குழாய் வழியே கரு முட்டை செல்கையில் அதனை ஆணின் விந்தணுக்கள் வந்து அடையுமானால் கருச்சேர்க்கை ஏற்படும். கருவானது கருப்பையை அடைந்து அதன் சுவரில் ஒட்டிக் கொண்டு குழந்தையாக வளர ஆரம்பிக்கும். இந்தச் செயல்களில் ஏதேனும் ஒன்றோ அல்லது பலவோ, உடலுறுப்புகளின் குறைகள் காரணமாக நிகழாமல் போகலாம். (உதாரணமாகச் சில பெண்களுக்கு கரு இணைப்புக் குழாய்களில் அடைப்பு இருக்கும். விந்தணுக்கள் கரு முட்டையைச் சென்றடைய விடாமல் தடுக்கும். சில ஆண்களுக்கு விந்துவிலுள்ள உயிரணுக்களின் எண்ணிக்கை குறைவாக இருக்கும். ஒரு சில தம்பதிகளுக்கு வெளிப்படையான காரணங்களின்றியே கருவுறுதல் கை கூடாமல் இருக்கலாம். இத்தகைய சமயங்களில் கைகொடுப்பதுதான் டெஸ்ட் ட்யூப் பேபி தொழில் நுட்பம்!

'டெஸ்ட் ட்யூப் பேபி' என்றதுமே பள்ளிப் பருவத்தில் கெமிஸ்ட்ரி லாபில் உபயோகித்த சோதனைக் குழாய் நினைவுக்கு வருவது இயல்பு. ஆனால் இந்த கண்ணாடி டியூபை செயற்கை கருத்தரிப்புக்குப் பயன்படுத்துவதில்லை.

"Non toxic plastic எனப்படும் நச்சுத்தன்மையில்லாத உயர்ரக பிளாஸ்டிக் தகடுகளைத்தான் உபயோகிக்கிறோம்" என்கிறார் டாக்டர் கமலா செல்வராஜ்.

இந்தத் தகடுகளில் ¾ சென்டிமீட்டர் ஆழமும் ஒரு மில்லி லிட்டர் கொள்ளளவும் உடைய நான்கு குழிகள் இருக்குமாம்.

"பெண்ணிடமிருந்து பெறப்படும் கரு முட்டையையும் ஆணிடமிருந்து பெறப்படும் விந்துவிலுள்ள உயிரணுக்களையும் இடது பக்கத்துக் குழிகளில் இணைத்து, பின்னர் வலது பக்கக் குழிகளுக்கு மாற்றுவோம். கரு உருவாவதற்குத் தேவையான மாற்றங்கள் நிகழ்ந்தவுடன், வலப் பக்கக் குழியிலுள்ளதை அப்படியே கர்ப்பப் பைக்குள் செலுத்த ஏற்பாடு செய்வோம். உயிரணு கருமுட்டை சேர்க்கையை 48 முதல் 72 மணி நேரம் வரை தான் உடலுக்கு வெளியே வைத்திருக்க முடியும். அதற்கு முன்னதாகப் பெண்ணின் உடலுக்குள் செலுத்திவிட வேண்டும்."

இந்த முறையில் கருவுறச் செய்வதை Assisted Reproduction Technology — ART — என்று அழைக்கிறார்கள். இத்தொழில் நுட்பத்தை ஒன்பது முறைகளில் செயல்படுத்துகிறார்கள். அவை ஒவ்வொன்றைப் பற்றியும் டாக்டர் கமலா செல்வராஜ் தரும் விளக்கங்கள் :

1) GIFT (Gamete intra fallopian transfer) :

ஆணின் உயிரணுக்கள் குறைவாகவோ, கருப்பின்றியோ இருக்குமானால் கருவுறுவதற்கான வாய்ப்புகளும் குறையும். இந்த மாதிரி சமயங்களில் பெண்ணின் கருவகத்திலிருந்து கரு முட்டையை வெளியே எடுத்து, உடலுக்கு வெளியே கருமுட்டையையும் விந்துவையும் சேர்த்து, உடனடியாகப் பெண்ணின் கரு இணைக் குழாயினுள் செலுத்தி விடும் முறை தான் GIFT. இயற்கையான சூழலில் (கரு இணைக் குழாயில்) கரு இணைப்பு நிகழ்வதற்குக் கொஞ்சமாக உதவி செய்கிறோம் இம் முறையில். ஆனால், இதைக் கையாள வேண்டுமென்றால் பெண்ணின் இரண்டு கரு இணைக் குழாய்களுள் ஒன்றாவது நார்மலாக இருக்க வேண்டும். கருசுறுப்பான விந்துக்களை தானமாகப் பெற்று கருவுற முடிவு செய்யும் போது இம்முறையைக் கையாளலாம்.

2) PROST அல்லது ZIFT அல்லது TET.
(Pronucleus Stage Transfer;)
(Zygote Intra Fallopian Transfer;)
(Tubal Embryo Transfer.)

முதலில் சொன்ன GIFT முறையில் இயற்கைக் கருத்தரிப்புக்குக் கொஞ்சமாக உதவுகிறோம் என்றால், இந்த முறைகளில் அதைவிடக் கொஞ்சம் கூடுதலாக உதவுகிறோம். முன் சொன்னது போலவே உடலுக்கு வெளியே கரு முட்டை - விந்து சேர்க்கை நிகழ்த்தி, அதை 24-28 மணி நேரம் கணப்புப் பெட்டியில் வைப்போம். ஆண், பெண் அணுக்கள் இணைந்த 'Pronucleus' என்கிற நிலையை அடையும் போது கரு இணைக் குழாயினுள் செலுத்தப்படுகிறது. கரு இணைப்பை உறுதி செய்து கொண்ட பிறகே உள்ளே செலுத்துகிறோம் என்றாலும் அது கர்ப்பப் பையைச் சென்று அடைந்து தொடர்ந்து வளர வேண்டும். வெற்றி வாய்ப்பு 30-40 சதவிகிதம்.

# 'குவா குவா

3) SOFT (Sperm Attached Oocyte Fallopian Transfer) :கருமுட்டையை ஐந்து மணி நேரம் தனியாகவும் ஐந்து மணி நேரம் ஆண் உயிரணுக்களுடன் சேர்த்தும் வைத்து, பின்னர் கரு இணைக் குழாய்க்குள் செலுத்தும் முறை. இது GIFT முறைக்கும் PROST முறைக்கும் இடைப்பட்ட முறை.

4) IVF & ET (Invitro Fertilisation and Embryo Transfer):

சாதாரணமாகப் பெண்ணின் இரு கருவகங்களில் மாதம் ஒரு முறை ஒவ்வொரு கரு முட்டையே உருவாகும். கூடுதலான கரு முட்டைகள் உருவாவதற்கு, ஹார்மோன் செலுத்தி ஊக்குவிக்கிறோம். பின்னர் சிறிய அறுவைச்

# ங்கட்க கூடுதல் உதவிகள்!

சிகிச்சை மூலமாகவோ அல்லது லாபரோஸ் கோப்பை பிறப்புறுப்பு வழியே செலுத்தியோ கரு முட்டைகளை வெளியே எடுக்கிறோம். உயிர் காக்கும் திரவத்தில் இட்டு, நைட்ரஜன், கரியமிலவாயு, பிராண வாயு ஆகியவை முறையே 90, 5, 5, சதவிகிதம் அடங்கிய ஒரு கணப்புப் பெட்டியில் ஆண் விந்துவிலிருந்து உயிரணுக்களைத் தேர்ந்தெடுத்து சீர் வெப்பத்தில் 45 நிமிடம் வைக்கிறோம். பிறகு ஒவ்வொரு முட்டைக்கும் ஒரு சொட்டு விந்தணு சேர்த்து 28 மணி நேரம் கணப்புப் பெட்டியில் வைத்துக் காப்பாற்றுகிறோம். கரு இணைந்ததற்கு அடையாளமாக pronucleus தோன்றியதும் நேரடியாகக் கருப்பைக்குள்ளேயே அதனைச் செலுத்துகிறோம்.

ஒன்றுக்கு மேற்பட்ட கரு முட்டைகளை எடுத்து விந்துவுடன் இணைக்கும் போது ஏதேனும் ஒன்றோ இரண்டோ வெற்றிகரமாக சேர்க்கை நிகழ்த்தி வளர வாய்ப்பு இருக்கிறது அல்லவா. எனவே ஒரு பெண்ணின் ஒரே ஒரு முட்டையை வைத்துக் கொண்டு செயற்கைக் கருத்தரிப்புக்கு முயல்வதைவிட இதில் வெற்றிக்கான வாய்ப்பு கொஞ்சம் கூடுதலாயிருக்கும்.

5) DIPI (Direct Intra Peritonial Insemination) :

பெண்ணின் கருவகத்திலிருந்து கரு முட்டை பழுத்து வெளியேறும் குறிப்பிட்ட நேரத்துக்கு முன் கணவனின் விந்துவைப் பெற்று, அதில் சுறுசுறுப்பான உயிரணுக்களை மட்டும் கடைந்தெடுத்து, கணப்புப் பெட்டியில் ஒரு மணி நேரம் வைக்கிறோம். பிறகு, அணுக்களை ஊசி மூலம், பெண்ணின் பிறப்புறப்பு வழியே கர்ப்பப் பையின் பின் புறத்துக்குச் செலுத்துகிறோம்.

இயற்கையான உடலுறவுச் சேர்க்கையில் விந்தணுவும் கரு முட்டையும் கரு இணைக் குழாயில் இணைந்து ஒருயிராகி அப்புறமே கருப்பையை அடைந்து, அதன் சுவரில் ஒட்டிக் கொண்டு வளரும். இப்படியில்லாமல் கரு முட்டையானது கருவகத்திலிருந்து வெளிப்பட்டு கருப்பையை அடையும் போது அங்கே விந்துணுக்கள் அதனுடன் சேர வழி செய்து தருகிறோம். கரு இணைப்புக் குழாயில் கருதரித்து சிக்கல்கள் உண்டாவதை இந்த முறையினால் தவிர்க்க முடியும்.

6) DUSOT (Direct Ultrasound Sperm Oocyte Transfer) :

மேற்சொன்ன DIPI முறையை ஒத்ததுதான் இதுவும். ஆனால் முதிர்ந்த கரு முட்டையை உடலுக்கு வெளியே எடுத்து, உயிரணுக்களைச் சேர்த்து கருப்பையின் பின்னே உள்ள Pouch of Douglas என்ற பகுதியில் செலுத்துவோம்.

7) DOST(Direct Oocyte Sperm Transfer):

செயற்கை முறையில் கருவகத்தை ஊக்குவித்து, அதிகமான கரு முட்டைகள் பெற்று, அவற்றை உடலுக்கு வெளியே உறிஞ்சி எடுத்து (லாபராஸ்கோப் மூலம்) விந்தணுக்களைச் சேர்த்து நேரடியாகக் கருப்பைக்குள் செலுத்தும் முறை.

8) MIST (Micro Injection Sperm Transfer) :

விந்துவிலுள்ள உயிரணுக்கள் மேல் நோக்கி நகர்ந்தபடியே இருக்க வேண்டும். அப்போதுதான் அவை கருமுட்டையுடன் போய் இணைய முடியும். சிலருக்கு இவ்வாறு சுறுசுறுப்பாக நகராத அணுக்கள் அமைந்துவிடும். அத்தகைய அணுக்களை மெல்லிய ஊசி மூலம் உறிஞ்சி எடுத்து கரு முட்டைக்குள்ளேயே செலுத்தும் முறை MIST. இதற்குப் பயன்படுத்தப்படும் இஞ்செக்ஷன் உபகரணங்களின் மதிப்பு சுமார் எட்டரை லட்சம் ரூபாய்!

9) MIMIC (Micro Insemination, Micro Injection into Cytoplasm) :

Cytoplasm என்பது கரு முட்டையின் உள்புறம். MIST முறையில் சொன்னது போல் உயிரணுக்களை எடுத்து கருமுட்டையின் இந்த உட்புறத்தில் செலுத்துவோம். இதை மைக்ரோஸ்கோப் துணையுடன் செய்ய வேண்டும்.

— நிர்மலா சக்ரவர்த்தி.






புரட்சித்தமிழன்
**சத்யராஜ்**
நடித்துவழங்கும்

ராஜ்பிலிம்ஸ் இண்டர்நேஷனல்
**ராமனுஜனின்**

# வில்லாதி வில்லன்

சினிமாஸ்கோப்

கதை திரைக்கதை வசனம் இயக்கம்
**சத்யராஜ்**

வித்யாசாகர்
ஜெயனன்வின்சென்ட்
வைரமுத்து

**நடிப்புக்கு ராதிகா**



**வாய்மையே வெல்லும்**

**ஆல்பட்** A/c
**உதயம்** A/c
**அகஸ்தியா** 70 mm
3 காட்சிகள்
**தேவிபாரடைஸ்** 70mm A/C
பகல் காட்சி
**அபிராமி** A/c
4 காட்சிகள்
மற்றும் தமிழகமெங்கும்

Elegant



# எம்.பிக்களுக்கு மட்டும் தடா!

அரசுப் பணம் ஐந்தே கால் கோடி ரூபாய் வரை செலவழித்து எம்.பிக்களுக்குக் கம்ப்யூட்டர் வழங்கப்பட்டுள்ளது. அந்த கம்ப்யூட்டர்களின் பராமரிப்புக்காக, மாதம் இரண்டாயிரம் ரூபாய் அலவன்ஸ் வேறு தரப்படுகிறது. ஒரு சில எம்.பி.க்கள், தமக்குத் தரப்பட்ட கம்ப்யூட்டர்களை விற்று விட்டார்கள். இன்னும் சிலரோ, வெளியாருக்கு வாடகைக்குக் கொடுத்து விட்டார்கள்!

சூர்ய பிரகாஷ் ரெட்டி என்பவர் ஆந்திர காங்கிரஸ் எம்.பி. இவருக்கு எம்.பி. என்ற முறையில் கிடைக்க வேண்டியதை விட, பெரிய பங்களா ஒன்று டெல்லியில் லோடி எஸ்டேட்டில் ஒதுக்கப்பட்டுள்ளது. காரணம், சூர்ய பிரகாஷ் ரெட்டி, முன்னாள் ஆந்திர முதல்வர் விஜய பாஸ்கர ரெட்டியின் மகன். அதுமட்டுமல்ல, வீடு ஒதுக்கீடு செய்யும் கேபினட் துணை கமிட்டியின் தலைவர் விஜயபாஸ்கர ரெட்டிதான்!

ஜெயின் கமிஷனின் நீதிபதி ஜெயின், விடுதலைப் புலிகள் இயக்கம் கிளை பரப்பியிருக்கும் கனடா, லண்டன் ஆகிய நாடுகளுக்குச் சென்று, விசாரணை நடத்தி வருவதற்காக அரசிடம் அனுமதி கோரினார். ஆனால் அனுமதி தரப்படவில்லை. இப்போது ஜனாதிபதி சந்திரிகாவின் வாக்குமூலத்தைப் பதிவு செய்யவும், எல்.டி.டி.ஈ. பற்றி அவரது கருத்தைக் கேட்கவும் ஸ்ரீலங்கா சென்று வர அனுமதி கோரியிருக்கிறார். இம்முறை கோரிக்கை நேரடியாய்ப் பிரதமருக்கே அனுப்பி வைக்கப்பட்டுள்ளது. பிரதமர் அலுவலகம் மௌனம் சாதிக்கிறது.

தடா சட்டம் காலாவதியான மறுநாள், டெல்லியில் ஒரு எம்.பி.யிடம் பேசிக் கொண்டிருந்த ஒரு பத்திரிகையாளர், 'நாட்டில் TADA இல்லையென்றாலும், எம்.பி.க்களுக்கு TADA உண்டு' என்றார். எம்.பிக்கு ஒன்றும் புரியவில்லை. பத்திரிகையாளர் விளக்கினார். "நான் சொன்னது எம்.பிக்களுக்கு TA, DA அதாவது Travelling allowance, Dearness allowance உண்டு என்று."

— கௌதம்

## நாடக சேஷன்

அனைத்து அரசியல் கட்சிகளையும் கெடுபிடி செய்யும் சேஷன், வீட்டுக்குள்ளே எப்படி செயல்படுவார் என்ற கோணத்தில் யோசித்து எழுதப்பட்டதுதான் 'இது என்றும் தொடரும்' நாடகம்.

சேஷன் பொது நிகழ்ச்சிகளில் பேசியவற்றை ஆங்காங்கே நாடக நாயகன் சபேசனும் பேசுகிறார். அடையாள அட்டை, நூல் வெளியீடு – அதை ஒட்டிய பிரச்னைகள் என்று பலவும் உண்டு. சபேசனாக வரும் வி. கோபாலகிருஷ்ணனின் கெட் அப் சேஷனை நினைவுபடுத்துகிறது.

படபடப்பாய்ப் பேசும் போதும் சரி, வெட்டு ஒன்று துண்டு ரெண்டாய்ப் பேசும்போதும் சரி. வி. கோபாலகிருஷ்ணன் பிய்த்து உதறுகிறார்.

சிரிப்பு வரும் இடங்கள் ஏராளம் என்றாலும், அரங்கில் சிரிக்கத்தான் ஆட்கள் குறைவு. ஆம்! இங்கிலாந்தின் 'டெய்லி தியேட்டர்' பாணியில், நாரத கான சபா மினி ஹாலில் நூறு நாட்கள் இந்த நாடகத்தை நடத்தத் திட்டமிட்டு, வெள்ளி விழாவும் கொண்டாடி விட்டார்கள்... ஆனால் டி.வி.யால் சிறைப்படுத்தப் பட்டுள்ள ரசிகர்கள்தாம் நாடகம் பார்க்க வருவதில்லை.

— எஸ். சந்திரமௌலி



# உங்களின் எதிர்காலம் உங்கள் கையில் தான் !



# CITY FINANCE (REGD)

293, Royapettah High Road, Royapettah,
Madras-14, Ph:8267537

7 ஆண்டுகள் ஆழ வேரூன்றிய நம்பிக்கை நிதி நிறுவனம் வழங்கும்



# பூர்ண கும்பம்

'பூர்ண கும்பம் பிக்சட் டெபாசிட்' திட்டத்தில் உங்கள் முதலீடு ரூ. 1000 x 4 மட்டும். இத்தொகையை ஆண்டுக்கு ரூ. 1000 வீதம் 4 ஆண்டுகளில் செலுத்தினால் போதும்.

இத்திட்டம் தொடங்கிய நான்காவது ஆண்டிலிருந்து 22 ஆண்டுகளுக்கு ஆண்டு தோறும் ரூ. 1000 மட்டும் வட்டித் தொகையாக வழங்குகிறோம்.

இத்திட்டம் 22 ஆண்டு இறுதியில் முதிர்வுறும் பொழுது

## ரூ. 1 லட்சம்

முதிர்வுத் தொகையை பூர்ண கும்பத்துடன் உங்களுக்கு சமர்ப்பிக்கிறோம்.

**சிட்டி ஃபைனான்ஸில் முதலீடு செய்து முன்னேறுங்கள்.**



# ஒரே ஒரு சீன்!

தங்கச்சிபட்டியில் படப்பிடிப்பை நடத்திக் கொண்டிருந்தான் இளம் டைரக்டர் கவிசந்திரன்.

கிராமத்துக் குயிலாக நிலாஸ்ரீ, பாவாடை தாவணியில் நின்று கொண்டிருந்தாள், புத்தகக்கட்டை மார்போடு அணைத்தபடி.

சிகரெட்டை உதட்டில் பொருத்தி வித்தியாசமாக சிந்தித்துக் கொண்டிருந்தான் கவிசந்திரன். சுத்துபட்டி கிராமத்து ஜனங்கள் படப்பிடிப்பை வேடிக்கை பார்க்கக் கூடி நின்றார்கள்.

அந்த வித்தியாசமான ஐடியா அப்போதுதான் தோன்றியது டைரக்டருக்கு. தன் எண்ணத்தை உதவியாளரிடம் கிசுகிசுத்தான்.

உதவி டைரக்டர் கூட்டத்தை நோட்டமிட்ட போது, அறுபது வயதைத் தாண்டிய பெரியவர் ஒருவரும் தென்படவில்லை.

"கூட்டத்தைப் பார்த்து, "உங்க ஊர்ல அறுபது வயதைத் தாண்டிய பெரியவர் யாராவது இருந்தால் கூட்டி வாருங்களேன். ஒரே ஒரு ஷாட் எடுக்கணும். வசனம் எதுவும் பேச வேண்டாம். நூறு ரூபா தருவோம்!" என்றான் உதவி டைரக்டர் தாமோதரன்.

மூச்சிரைக்கத் தன்முன் வந்து நின்ற கருப்புக்குட்டியை "என்னல விசயம்?" என்றார், பேச்சிமுத்து.

"தாத்தா, உங்களுக்கு சினிமாவுல நடிக்க ஒரு சான்ஸ். சும்மா இல்ல நூறு ரூபா தருவாங்க. வசனம் எதுவும் பேச வேண்டாம் வாங்க தாத்தா!" என்று கையைப் பிடித்து இழுத்தான் கருப்புக்குட்டி.

திண்ணையில் இருந்து வெற்றிலையைக் குதப்பிக் கொண்டிருந்த பொன்னுத்தா பாட்டி பச்சைக் கொடி காட்ட, துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு, கருப்புக் குட்டியோடு படப்பிடிப்பு நடக்கும் இடத்துக்கு வந்து சேர்ந்தார் பேச்சிமுத்து.

'சரியான ஆளு. நாம நினைச்சபடியே இருக்காரே!' கவிசந்திரனும் தாமோதரனும் சந்தோஷப்பட்டுக் கொண்டார்கள்.

நிலாஸ்ரீக்கு, காட்சியை விளக்கிக் கொண்டிருந்தார் டைரக்டர். "இதோ பாரும்மா. புத்தகக் கட்டை மார்போடு அணைச்சி ஒயிலா நடந்து வரணும்."

"நான் செய்துடுவேன். அந்தப் பெரியவர் என்ன செய்யணும்னு சொல்லிக் கொடுங்க!" என்றாள் நிலாஸ்ரீ.

பேச்சிமுத்துவிடம் திரும்பிய டைரக்டர், "இதோ பாருங்க பெரியவரே, இந்தப் பொண்ணு ரோட்டுல ஒயிலா நடந்து வருவா."

"அவ எப்பவும் நடந்துட்டுப் போறா. நான் என்ன செய்யணும்னு சொல்லுங்க," என்றார் பேச்சிமுத்து.

"அவ காலேஜ் போறதுக்காக இந்த பஸ் ஸ்டாப்புல வந்து நிப்பா. பின்னால வந்துக்கிட்டு இருந்த நீங்க, அவளைப் பார்த்து ஒரு ஜாலிக்காக விசில் அடிக்கி நீங்க. அவ திரும்பிப் பார்ப்பா. அப்படியே கண்ணைச் சிமிட்டணும். அவ்வளவுதான். அதோடு உங்க சீன் முடிஞ்சது."

பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்த பேச்சிமுத்து, தம் காவிப் பல் தெரிய சிரித்துக் கொண்டே, "ஏய்யா நீ கொடுக்கிற நூறு ரூபாய்க்காக, என் பேத்தி மாதிரி இருக்கிற இவளைப் பார்த்து நான் விசிலடிக்கணுமா? அட தூ வெட்கமில்ல உங்களுக்கு? இந்தக் கூட்டத்தைப் பாருங்க. அதுல என் பேத்தியும் நிக்கிறா வேடிக்கை பார்க்க. யோவ் நான் கிராமத்து மண்ணுல உழைச்சி வாழ்ந்துக்கிட்டு இருக்கிறவன். நீங்க சொல்ற மாதிரியெல்லாம் செய்ய பட்டணத் துலேயே எவனாவது இளிச்சவாயன் கிடைப்பான். போயிப் பாருங்க!" என்றபடி திரும்பி நடக்க ஆரம்பித்தார்.

— வாஷிசெல்வன்

# காசி பில்டர்ஸ் வழங்கும் காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்!

25.06.95 அன்று நடைபெற்ற 16-வது குலுக்கலில் வீடு பெற்ற அதிர்ஷ்டசாலிகளை "காசி பில்டர்ஸ்" நிறுவனம் வாழ்த்துகிறது. முன்பு குலுக்கலில் வெற்றி பெற்றவர்களுக்கு அதே மேடையில் சாவி வழங்கப் பட்டது. வீடு பெற்ற அதிர்ஷ்டசாலிகளின் பெயர்களும், முகவரியும் வரும் இதழில் பிரசுரிக்கப்படும்.

**"காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்"** திட்டத்தில் ரூ. 1,500/ முதல் ரூ. 5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி 300 முதல் 1000 சதுரடிகள் வரை உள்ள வீடுகளை குலுக்கல் முறையில் தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை சொந்த வீட்டிலிருந்து கொண்டே வாடகை போல் செலுத்தலாம்.

## சுபமங்களா திட்டம் :

இத் திட்டத்தில் ரூ. 10,000/- மட்டுமே முன்பணமாக செலுத்தி சொந்த வீடு பெறலாம். மீதித் தொகைக்கு நாங்கள் கடன் உதவி ஏற்பாடு செய்து தருகிறோம்.

## வீடு கிடைக்கும் இடங்கள் :

சென்னை கே.கே. நகர் (மேற்கு), விருகம்பாக்கம், வடபழனி, சாலிகிராமம், போரூர், நங்கநல்லூர், பல்லாவரம் (இரயில் நிலையம் அருகில்), வளசரவாக்கம், கோடம்பாக்கம் (ரெங்கராஜபுரம் மெயின் ரோடு) ஆகிய இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

*மேலும் விவரங்களுக்கு :*

## காசி பில்டர்ஸ்

மற்றும்

## காசி ஹவுஸிங் & டெவலப்மெண்ட் லிமிடெட்

**காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ்,**
91, 92 ஜவாஹர்லால் நேரு சாலை,
அசோக் நகர், சென்னை - 600 083.
போன் : 4822206, 4821969, 4825606, 4825506 FAX : 044-4822206
கிளை அலுவலகம் : நெ. 13, கிழக்கு ஜோன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை,
சென்னை - 600 015, போன் : 456464

**ஞாயிறு முழு நேர அலுவலகம் உண்டு**

# காசி பில்டர்ஸ்

நிறுவனத்தாரின்

காசி இன்வெஸ்ட்மெண்ட் & கன்சல்டண்ட் கார்ப்பரேஷன் வழங்கும்

## வைப்புநிதி (பிக்சட் டெபாசிட்) திட்டங்கள்

### 1. நிரந்திர வைப்புநிதித் திட்டம்:- (பிக்சட் டெபாசிட்)

| குறைந்தபட்ச தொகை | காலம் | வட்டி | ஊக்கத்தொகை |
|---|---|---|---|
| ரூ. 5,000/- அதற்கு மேலும் ரூ. 1,000/- த்தின் மடங்கில் | 45 நாட்கள் 6 மாதத்திற்குள் | 15 % | 1 % முதல் 4 % வரை |
| | 6 மாதத்திற்கு மேல் 1 வருடத்திற்குள் | 18 % | |
| | 1 வருடத்திற்கு மேல் 3 வருடத்திற்குள் | 21 % | |
| | 3 வருடத்திற்கு மேல் | 24 % | |

### 2.

காசி பாண்ட்

ஊக்கத் தொகை

5%

குறைந்தபட்ச தொகை ரூ. 5,000/- அதற்கு மேலும் ரூ. 1,000/த்தின் மடங்கில். உங்களின் பணம் 'காசி பாண்ட்' திட்டத்தின் மூலம் 3½ ஆண்டுகளில் இருமடங்காகிறது.

மக்கள் சேவையில்

30

ஆண்டுகள்

### எங்களின் இணை நிறுவனங்கள்

1. காசி ஏ/சி தியேட்டர், அசோக் நகர், சென்னை
2. காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிமிடெட்
3. காசி ஸ்டீல்ஸ் & அலாய்ஸ் லிமிடெட்
4. காசி இண்டஸ்ரியல் எஸ்டேட்
5. ஹோட்டல் காசி இண்டர்நேஷனல் (பி) லிட், திருத்தணி
6. காசி டிரக்ஸ் & ஓலியோ ஆயில் லிமிடெட்

**குறிப்பு** :- வாடிக்கையாளர்கள் எங்களது வைப்பு நிதியில் முதலீடு செய்ய விரும்புவோர் கீழ்கண்ட கூப்பனை நாள், நேரம் குறிப்பிட்டு பூர்த்தி செய்து, கீழ்கண்ட எங்களது முகவரிக்கு அனுப்பி வைப்பார்களேயானால், எங்கள் நிறுவனத்தின் பிரதிநிதி தங்களின் இருப்பிடத்திற்கு நேரில் வந்து அனைத்துத் திட்டங்களையும் தங்களுக்குப் புரியும்வண்ணம் எடுத்துரைப்பார்கள். தாங்கள் 'வைப்புநிதித் திட்டத்தில்' முதலீடு செய்யும் தொகையை, எங்கள் பிரதிநிதியிடம் பணமாகவோ அல்லது காசோலையாகவோ செலுத்தும் பட்சத்தில் பணம் பெற்றுக் கொண்டதற்கான ரசீது மற்றும் சான்றிதழ்களை தாங்கள் பெற்றுக் கொள்ளலாம்.

மேலும் விவரங்களுக்கு




**காசி பில்டர்ஸ்** மற்றும்

**காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிட்.**

காசி தியேட்டர் காம்ப்ளெக்ஸ், 91, 92 ஜவஹர்லால் நேரு சாலை, அசோக் நகர், சென்னை - 600 083.
போன் : 4822206, 4821969, 4825606, 4825506 Fax : 044-4822206
கிளை அலுவலகம் : நெ. 13, கிழக்கு ஜோன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-15. போன் : 456464

**ஞாயிறு முழு அலுவலகம் உண்டு.**

---

தங்கள் நிறுவனத்தின் வைப்புநிதித் திட்டத்தில் சேர விரும்புகிறேன். இது பற்றிய விபரம் அறிந்துகொள்வதற்கு தங்களின் அதிகாரம் பெற்ற பிரதிநிதியை கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.

பெயர் : ..............................................................................................

முகவரி : ..............................................................................................

..............................................................................................

நாள் .................................................. நேரம் ..................................................

கையொப்பம்

---

15

# பாலகுமாரன்

# உடையார் (?)

"நாச்சியப்பச் செட்டியார் எஸ்டேட்ல காப்பித் தோட்டம் வாங்கப் போறார். உனக்கெதுனா காப்பித் தோட்டம் தெரிஞ்சா எங்கிட்டச் சொல்லு. விலை படிஞ்சா பார்ட்டி துட்டு கீழ வெச்சுரும். விக்கினம்னு அலையறவன்கிட்ட என்ன கூட்டினு போ. வாங்குனம்னு அலையறவன் கிட்ட நா கூட்டிட்டு போறேன். நடுவுல எதுனா கெடச்சா நாமளும் சாப்பிடலாம்."

ஏலத் தோட்டத்தில் வேலை செய்யும் விநாயகம் காப்பித் தோட்டத்தில் வேலை செய்பவனிடம் சொன்னான்.

"அப்ப அவங்க ஏலத் தோட்டம் விக்கற மாதிரி இல்லையா?"

"ஏன் விக்கணும்?"

"அது இல்ல. நாச்சியப்பன் போன வுடனே எஸ்டேட் போய்டும்னு நெனச்சேன்."

"அதுக்கு வேற இடம் பார். அந்த பொம்பள பகவதி இருக்கிறவரைக்கும் ஒரு ஏலப் பழங்கூட எஸ்டேட் விட்டு போகாது. நாச்சியப்பச் செட்டியாரா எஸ்டேட் நடத்துனாரு? அந்த நாகர்கோயில் பொம்பள யில்ல நடத்துனா. கொஞ்சநஞ்ச சாமர்த்தியமா? அந்தம்மா கிழிச்சக்கோட்ட செட்டியார் என்னிக்காவது தாண்டியிருக் காரா? செட்டியாரோட மட்டும் நின்னுச்சா அந்த பொம் பள, செட்டியார் பொண்டாட்டி மேலல்ல பிடிமானம் வெச்சுது. நேத்து சாயந்தரம் புள்ள வந்துட்டான். செட்டி யாரோட சொந்த புள்ள. மூத்த மகன் ஏலக்கா பத்தி சொல்லிக்குடுங்க சின்னம்மானு கேக்கறான். அந்தப் பொம்பள முதல் பாடம் ஆரம்பிச்சுது பாருங்க, அசந்துட் டேன். 'ஏலக்காவப் பத்தி எல்லாம் சொல்லித் தர்றேன். ஆனா எங்கிட்ட பாடம் கேக்கிறதையும் உனக்கு ஒண்ணும் தெரியாதுன்றதையும் யார்க்கிட்டயும் சொல்லாத. தெரிஞ்சா மாதிரியே நடந்துக்காத. அது உனக்கு ரொம்ப நல்லது.' எப்படியிருக்கு முதல் பாடம்? இப்படிச் சொல்லித் தர உங்களுக்குத் தெரியுமா? ஏலக்காவ என்ன பண்றதுன்னு தெரியாம இருந்தது. அந்தக் காலம். என்னிக்கு அரபு தேசத்துல டீல போட்டு ஏலக்கா சாப்பிட ஆரம்பிச் சானோ, அன்னிக்கு இந்த மலைக்கு மவுசு வந்திருச்சு. இப்ப அமெரிக்காலயும், ஏலக்கா எதெதுலயோ போட ஆரம்பிக்க றாங்க. பேக்கரி ஐட்டத்துல ஏலக்காய் போட்டு, ஜனங் களுக்கு புடிச்சுப் போச்சு. அப்புறம் ஏலக்கா தங்கம் விலை தான்."

போடிமெட்டு தாண்டி, கேரளம் என்று தெளிவாக அறிவிக்கப்பட்ட பகுதியில் அந்த மார்க்கெட் பகுதி இருந் தது. நாற்பது கடைகளும், அகலமான நடைபாதையும் உள்ள பகுதி அது. நாலு பக்கமும் மலைகள் சூழ்ந்திருக்கும். சிறிய பள்ளத்தாக்கு அது. ஏலக்காய் உற்பத்தி செய்வோர் சங்கம், ஏலக்காய் தரகு வியாபாரிகள் சங்கம், ஏலத் தோட்டக் கூலித் தொழிலாளர்கள் சங்கம், லாரி கிளீனர்கள் சங்கம் என்று பல்வேறு பலகைகளும், கொடிகளும், அந்தப் பகுதிக்கு ஒரு புதிய விழிப்புணர்வைக் கொடுத்துக் கொண்டிருந்தன. கடந்த ஐந்தாண்டுகளாகத்தான், ஏலக்காய்களுக்கும், இந்த சங்கங்களுக்கும் ஒரு மரியாதை இருந்தது.

காப்பியின் மரியாதை ஏலக்காயால் கெட்டுப் போகவில்லை. பிரேசில் என்ற தேசத்தால் கெட்டது. பிரேசிலில் காப்பித் தோட்டத்தை ஒரு கலாசாரம் போல் பாதுகாத்து வந்தார்கள். ஒரு மொழியைப் போல் மரியாதை கொடுத்தார்கள். காப்பிப் பயிரில் பல முன்னேற்றங்கள் செய்து காப்பி குடிப்பதை தன் தரத்தினாலேயே உலகமெங்கும் பிரேசில் பரப்பியது. போடிமெட்டு காப்பிப் பயிரில் தரம் பிரேசில் காப்பிக் கொட்டையின் அருகாமையில் கூட இல்லை.

விளைச்சலும் கம்மி. தரமும் மட்டமென்பதால் கேரளத்துக் காப்பிக் கொட்டைகள் உள்ளூரிலேயே முட்டிக் கொண்டிருந்தன. காப்பித் தோட்டத்திற்கு மிகப் பெரிய சாகுபடிச் செலவு இல்லை. போட்ட உடனே பலன் கொடுக்கும் பயிர் என்றும் சொல்ல முடியாது. பூச்சிகள் தொந்தரவு அதிகம் இருந்தது. சிரமப்பட்டு விளைச்சலை அதிகமாக்கினால் விலை போன வருடத்தை விட பத்து சதவீதமாவது குறைவாயிற்று. கையைக் கடிக்கிற பயிராகவே,

'நட்டுட்டோம், வெட்ட வேணாம்' என்கிற பயிராகவே காப்பி இருந்தது.

'**கா**ப்பி எஸ்டேட் வாங்குற அளவுக்கு நாச்சியப்பச் செட்டியார் எஸ்டேட்ல லாபமா? - இருக்கும். ரெண்டு மூணு வருஷமா நல்ல மழை இல்ல. நேரத்துக்கு மருந்தடிச்சு, நேரத்துக்கு உரம் போட்டு, செடிய கொழுக்க வெச்சுருப்பாரு. அடுத்த தடவ, தொழிலாளிப் பிரச்னை ஏதாவது வந்தா சமாதானம் பண்ண பெரிய காசு வாங்கிடணும்.' யூனியனில் மாஷே என்றழைக்கப்படும் மாஸ்டருள் கணக்கு ஓடியது.

'காப்பித் தோட்டம் வாங்குறதாயிருந்தா, காப்பித் தோட்டத்தில் வேலை செய்யுற தொழிலாளியோட வாங்கணும். தொழிலாளி இல்லாத தோட்டம் விலைக்கு வராது. அந்தத் தொழிலாளிக்கு ஏலக்கா தோட்டத்துச் சம்பளம் தரணும். நீ வாங்குற எடத்து மொதலாளி, சம்பளப்பாக்கி வெச்சுருந்தா, அதையும் நீதான் தரணும். இந்த மாஷேக்குத் தெரியாம, இந்த மலைல ஒரு கல்லு கூடப் புரளாது. ஒரு காய் கூட அருகாது.'

- விலை பேசிவிட்டுத் திரும்பும் போது சொல்லி விட வேண்டும்.

"காப்பித் தோட்டமா? விலைக்குக் கேக்கறாங்களா? செய்யேன். ஒரு ரூபாய்க்கு ஒரு பைசா கமிஷன் தர்றேம்பா. எப்படியாவது பார்ட்டிய எடுத்துட்டு வாயேன். மூணு ரூம் வச்ச கல்லு வீடு இருக்கு. இதுக்கு துட்டு தரவேணாம். எஸ்டேட் வாங்குற போது இத சும்மா எடுத்துக்கட்டும். எப்படியாவது பார்ட்டியக் கொண்டாப்பா. இந்தக் காப்பித் தோட்டம் வாங்கினதுக்கு பத்து, நூறு கழுதை வாங்கியிருந்தாக் கூட உபயோகமா இருந்துருக்கும்."

..ப்பித் தோட்டத்தை கருமமென்று நினைத்தவன்



விநாயகத்திடம் கதறினான்.

"முள்ளுமில்ல. பல்லுமில்ல. முள்ளம் பன்னி, முள்ளம்பன்னினு சொல்லி, உங்கள வெளியக் கொணாந்து, நீங்க வந்ததும், உங்களக் குப்புறத் தள்ளிவிட்டு கொன்னுட ஏற்பாடு பண்ணாங்க. கடவுள் கிருபையால அப்படி ஒண்ணும் நடக்கல. உங்க மேல வெடி எறிஞ்சாக. எறிஞ்சது எனக்குத் தெரியும். முதல் நாள் பெஞ்ச மழைல, பூமி சேறா இருந்துதுல, பொத்துனு சேத்துல விழுந்து, வெடி செத்துப் போச்சு. வெடிச்சிருந்தது, நீங்க செத்துப் போயிருப்பீக. இப்பம், எதுக்கு மதுரைக்கு வந்தன்னா, அவங்க ஏலத் தோட்டத்தை அடமானம் வெச்சி, காப்பித் தோட்டம் வாங்கப் போறாக. மலைல இடுகாடும் ஒண்ணுதான். காப்பித் தோட்டமும் ஒண்ணு தான். அந்தப் பொம்பள, சின்னப் பையன ஏமாத்துது. ஒரு ஏக்கர் தோட்டத்த தொண்ணுாத்தொம்பது வருஷக் குத்தகைக்கு ரூவா பத்தாயிரத்துக்கே ஏன் வாங்கணும்? ஏழை சொல்லு அம்பலம் ஏறாது. காப்பித் தோட்டம் வாணாம்னு கதிரேசனுக்குப் புத்தி சொல்லுங்கோ. விலை கூடுதலா இருந்தாலும் ஏலத்தோட்டம் ஒண்ணு வாங்கிப் போடச் சொல்லுங்க. நீங்க ஆள வேண்டிய ஏலத் தோட்டம் அந்தப் பொம்பள ஆண்டுக்கிட்டு இருக்கு."

"முட்டாப்பொம்பள மகனே. வெறுமன பேசி என் வயித்தெரிச்சலக் கொட்டிக்காத. தோட்டத்தை எப்படி அவகிட்டருந்து புடுங்கலாம்னு சொல்லு."

- அந்தச் செட்டியார் விநாயகத்தின் கூக்குரலுக்குக் கோபமாய் பேசினார்.

"வழக்கமா மத்தவங்க பண்றதத்தான், நீங்களும் பண்ணனும்."

"அது என்ன வழக்கம்?"

"யூனியன் மாஷேக்குப் பத்தாயிரம் ரூபா குடுத்தா வம்புச் சண்டை ஆரம்பிச்சிடலாம்."

"யார் அவன்? ரெளடியா?"

"இல்ல - யூனியன் லீடர். அவனா ஒரு தகராற ஆரம்பிச்சு, அவனா தோட்டத் தொழிலாளிகள கிளறிவிட்டு, அவனா அடி தடிகளக் கொண்டாந்து, ஸ்ட்ரைக் பண்ணி, அப்புறம் சமாதானம் பேசி, பேசற போதே பெரிசா தகராறு பண்ணி, கத்திக்கபடால்லாம் காணிச்சு, ஏன்டா எஸ்டேட் வாங்குனம்னு நோகடிச்சிடுவான். அந்த நேரம் பாத்து, நீங்க விலை கேளுங்க. கொட்டிக் கவ்வுன தேள உதற்றா மாதிரி, உங்கிட்ட எஸ்டேட்டக் கொடுத்துடுவான்."

விநாயகம் சொல்லிவிட்டு, கழுதைப் புலிபோல் சிரித்தான். செட்டியாரும் சேர்ந்து கொண்டார். கண்மூடி யோசித்துவிட்டு, "செய்துருவோம்" என்றார்.

"**கா**ப்பித் தோட்டம் வாங்கப் போறாங்களா? பைத்தியமா புடிச்சிருக்கு பகவதி அம்மாளுக்கு? கண்ணுல வெச்சித் தோட்டத்தப் பார்த்துட்டு வர்றேன். ஒரு வள்ளிக்கூட அழுகக்கூடாதுன்னு சுத்தி, சுத்தி வர்றேன். பாம்பு கொத்தினாலும், அட்ட கடிச்சாலும், முள்ளம் பன்னி சிலும்புனாலும், பயப்படாம சுத்திட்டு இருக்கேன். என்ன ஒரு வார்த்த கேக்க வேணாமா? வேலக்கார நாய்தானேனு ஒரு அலட்சியமா? அந்த விநாயகத்தக் கூப்பிட்டு வெச்சு சொன்னாங்களாம். எங்கிட்ட சொல்லப்படாதா? ச்சே. நன்னி கெட்ட ஒலகம்." நாராயணன் அலுத்துக் கொண்டான்.

"**இ**ங்கேருந்து ஆரம்பிக்கறது நம்ம எஸ்டேட், நல்லா கவனிச்சுக்க. இடது, வலது பெண்டும் நம்மளதுதான். ஒரு மலை ஏறி, மூணு மலை சரிஞ்சு, நடுவுல ஒரு பள்ளத் தாக்கு நம்ம எஸ்டேட். அந்த நாலாவது மலைச்சரிவு இருக்கே. அது நம்முளுது இல்ல. அது ஒரு மலையாளிது. ஆனா அந்தச் சரிவுல நல்லவிதமா ஏலக்கா பயிர் பண்றதுல்ல."

பகவதி தோளைச்சுற்றிப் போர்த்திய போர்வையும் கையில் மூங்கில் கழியுமாய் வர, கதிரேசன், முன்னே போகும் சொர்ண லட்சுமியைப் பார்த்துக் கொண்டே மலை ஏறினான்.

"என்ன ப்ராப்ளம் சின்னம்மா?"

"தொழிலாளர் போராட்டம்."

"இங்கக் கம்யூனிஸ்ட்ங்க ஜாஸ்தியா?"

"ஆமாம். ஜாஸ்திதான். ஆனா இந்த எஸ்டேட் மூடுனதுக்குக் காரணம் கம்யூனிஸ்ட் இல்ல.

"வேற?"

"பொம்பள சமாசாரம்?"

"ஐய்யோ அப்டில்லாம் விஷயம் இருக்கா?"

"இதோட நின்னுடாது கதிரேச. மேல் ஜாதிக்காரனும், கீழ்ஜாதிக்காரனும் காசு இருந்தா ஒண்ணா சேர்ந்துடலாம். காசு இல்லாத ஏழையும், எஸ்டேட் வெச்சுருக்குற ஒனரும், ஒண்ணா சேரமுடியாது. சேர விட மாட்டாங்க. எஸ்டேட்ல வேல செய்யுற பொண்ண, முதலாளி கற்பழிச்சுட்டானு சொல்லி, அவள அழ வெச்சி, அவள



கட்சித் தலைவருக்கு வைத்த கட்அவுட்டுகளைக் காண்ட்ராக்ட் எடுத்தே கோடீஸ்வரர் ஆகிவிட்டாராம் அந்த பங்களா ஆசாமி!
— ஆர். சுப்பிரமணியன்

ஆமான்னு சொல்ல வெச்சி, பெரிசாப் பஞ்சாயத்த நடத்தி, பேசும் போதே அவன செருப்பால அடிச்சு, அவன் எஸ்டேட்டே வேணாம்னு ஓடிட்டான். அந்தத் தோட்டத் துல இருக்குற ஏலச்செடிக்கு, உரம் போடாது, மருந்து போடாத ரெண்டு, மூணு பேரு அனுபவிச்சிட்டு இருக்காங்க. யூனியன் லீடருக்கும் அதுல பங்கு போகுது."

"ஜாக்கிரதையா இருக்கணும்னு சொல் றீங்களா சின்னம்மா?"

"ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணும். ரொம்பக் குறைவாப் பேசணும். சில சமயம் மனுஷத்தன்மையே இல்லாம நடக்கணும்."

"ஏன் சின்னம்மா அப்படி? மனுஷாளுக்கு, மனுஷாள் நல்லவிதமாப் போகக் கூடாதா?"

பகவதி சிரித்தாள். மூச்சு வாங்க மலையேறினாள்.

"தொழிலாளிய மனுஷன்னு முதலாளி நினைக்கிறதில்ல. எலியும், பூனையுமாவே எப்பவும் இருக்காங்க. எல்லா இடத்துலயுமே அப்படித்தான் இருக்காங்க. இது நாம மட்டும் தீக்கக் கூடிய பிரச்னை இல்லை. பேசாத இரு."

அவர்கள் மலை உச்சியிலிருந்து மூன்று மலைச்சரிவையும், பள்ளத்தாக்கையும் பார்த்தார்கள். பகமை குறைந்த, நாலாவது சரிவையும் பார்த்தார்கள்.

"அந்த எஸ்டேட்டையும் வாங்கிட்டா என்னா?"

- ஆவலோடு, கதிரேசன் கேட்டான்.

"வாங்கணும். அந்த எஸ்டேட்ட வாங்கணும்னு, உங்க அப்பாக்கு ரொம்ப நாள் ஆசை. அதப்பத்திப் பேசினாக்கூடப் போதும் பிரச்னை வந்துடறது. எவன் சொத்தையோ, எவனோ இனாமா அனுபவிக்கிறான் இல்லையா? அதுனால தொந்தரவு வந்துடறது. எஸ்டேட் வாங்குறதுக்கு முன்னால, யூனியன் லீடரை வாங்கணும்."

"யார் யூனியன் லீடர்?"

"ஏன்? வாங்கப் போறியா?" - பகவதி சிரித்தாள்.

"ஏன் சின்னம்மா? ரொம்பக் கஷ்டமா?"

"காசத்தூக்கிப் போட்டா உலகத்துல எல்லாம் வாங்கலாம். நாம ஏலக்கா வாங்கப் போறமா? காப்பித் தோட்டம் வாங்கப் போறமா? அத முதல்ல டிசைட் பண்ணிக்கணும்."

- கதிரேசன் எதுவும் புரியாது, பூமியை வெறித்தான். தீவிரமாய் யோசித்தான். 'அப்பா வாங்க ஆசைப்பட்ட, அப்பாவால் வாங்க முடியாத, எஸ்டேட் நோக்கி நடந்தான். வேலி அருகே நின்று அந்த நிலத்தை வெறித்துப் பார்த்தான். திரும்பினான்.

"இத எப்படியும் வாங்கியாகணும் சின்னம்மா" உறுதியாய்ச் சொன்னான்.

"பன்னெண்டு லட்சம் ஆகும். தம்பி. இந்தப் பகுதி மட்டும் துண்டாத் தரமாட்டாங்க. இங்க ஆரம்பிச்சு, அடுத்த பக்கம் வரைக்கும் எஸ்டேட் போகுது. கிட்டத்தட்ட அதுவும் நாப்பது ஏக்கர். வாங்குறதோட முடியாது. மேற்கொண்டு செலவு பண்ணணும். அத்தனப் பாழாயிருக்கு. இதுக்குப் பதுலா காப்பித் தோட்டம் வாங்கலாம். இன்னித் தேதிக்கு ரொம்ப சல்லிசாக் கிடைக்கும்."

"காப்பி எஸ்டேட்டும் வாங்கணும். இந்த எஸ்டேட்டும் வாங்கணும். எத்தினி செலவானாலும், எவ்வளவு கஷ்டம் வந்தாலும் வாங்கியே தீரணும்."

"அப்ப மலைல இருக்குறதா தீர்மானம் பண்ணிட்டியா?"

"ஆமாம்."

"வாழ்க்கை முழுக்க மலைதானா?"

கதிரேசன் தயங்கினான். ஆனால், சட்டென்று சமாளித்துக் கொண்டு, "ஆமாம்" என்றான்.

"இந்த உறுதி மட்டும் ஒங்கிட்ட இருந்தாப் போதும் கதிரேசு. உன்னப் பெரிய எஸ்டேட் ஓனரா நான் மாத்திக் காட்டறேன்." பகவதி அவன் தலையில் கைவைத்தாள்.

கதிரேசன் தன்னையும் அறியாமல் சின்னம்மாவைக் கும்பிட்டான்.

சொர்ணலட்சுமிக்கு சகலமும் வியப்பாக இருந்தது.

(தொடரும்)

## திருச்சி வாசகர்களே! தயார்தானே?

உங்கள் முறை இது. குமரி மாவட்ட வாசகர்களுக்கு அடுத்தபடியாகக் கல்கியில் சிறப்புப் பக்கங்கள் திருச்சி மாவட்ட வாசகர்களுக்காக ஒதுக்குகிறோம்.

இப்போது திருச்சி மாவட்டத்தில் வசிப்பவர்களே எழுதலாம்.

ஜோக், கதை, துணுக்கு உண்மை நிகழ்ச்சி, மாணவர் நியூஸ்... எதுவாயினும் தபால் கார்டில் மட்டுமே எழுதுங்கள். 'திருச்சி துணுக்ஸ்' என்று முகவரிப் பகுதியில் மறக்காமல் குறிப்பிடவும்.

பிரசுரமாகும் துணுக்ஸுக்குச் சன்மானமும் தலைசிறந்த துணுக்குக்குச் சிறப்புப் பரிசும் உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

அதிகபட்சமாக நான்கு வாரங்களுக்குக் கல்கியில் உங்களுக்கென இட ஒதுக்கீடு செய்வோம். திருச்சி வாசகர்கள் திணறடிப்பார்கள் என்று தபால் பிரிக்கும் பிரிவினரை எச்சரித்து வைத்திருக்கிறோம்!

- ஆசிரியர்



• மனோஜ்

• மனோகரன்



இன்னும் சுவையான விஷயங்கள் கிடைக்கும்!'' என்று நமக்கு ஆலோசனை வழங்குகிற அளவுக்கு உற்சாகமாகப் பேச ஆரம்பித்து விட்டார்கள்!

''உங்கள் அப்பாவிடம் உங்களுக்குப் பிடிக்காதது என்ன?''

–இந்தக் கேள்வியைச் சில டீன் ஏஜ் பையன்களிடமும் பெண்களிடமும் கேட்ட போது, ''ஐய்யோ, மாட்டி விட்டு விடுவீர்கள் போலிருக்கிறதே!'' ''பிராக்ரஸ் ரிப்போர்ட் கார்டில் கையெழுத்து வாங்க வேண்டாமா?'' என்று தமாஷாக மிரண்டாலும் பிறகு, ''அம்மாவிடமும் கேளுங்களேன், அப்பாவைப் பற்றி

பதினான்கு வயது கார்த்திக் உடனே சொன்னான்... ''அவருக்குப் பயங்கர ஓட்டைக் கை. நாங்கள் வேண்டாமென்று தடுத்தால்கூட ஸ்டார் ஹோட்டல் டின்னர், பிறந்த நாள் பார்ட்டிகள், அமர்க்களமான டிரஸ்... என்று ஏராளமாகச் செலவு செய்யத் தயங்குவதே யில்லை. இப்படியிருந்தால் எப்படி? இப்போதெல்லாம் மேல்படிப்புக்கு எவ்வளவு செலவாகிறது! இப்போதுதான் அண்ணன் எஞ்ஜினியரிங் சேர்ந்திருக்கிறான். நானும் படிக்க வேண்டாமா? இதையெல்லாம் அவர் யோசித்துப் பார்ப்பதாகவே தெரியவில்லை!''

மகன் கார்த்திக்கின் குற்றச் சாட்டுக்கு அப்பா விசுவ நாதன் கவலைப்படுவதாகவே தெரியவில்லை. ''வாழ்க்கை வாழ்வதற்கே என்கிற பாலிசிதான் என்னுடையது. கல் யாணச் செலவு அது இது என்று வருவதற்கு எனக்குப் பெண் குழந்தையும் கிடையாது. இந்த நிலையில் எதற் காக இப்போதிலிருந்தே சிக்கனம் சிக்கனம் என்று சிரமமாக்கிக் கொள்ள வேண்டும்? அப்புறம் இன் னொரு விஷயம்... செலவு செய்யச் செய்யத்தான் மேலும் மேலும் சம்பாதிக்க வேண்டும் என்கிற ஆர்வம் ஏற்பட்டு, கடுமையாக உழைக்கவும் தூண்டுகிறது!'' என்கிறார், விஸ்வநாதன்.

''எங்கப்பா இந்தக் காலத்துக்கு ஏற்ற ஆசாமியே இல்லை. சுத்த வெகுளி. இதைப் பயன்படுத்திப் பலரும் அவரை முதுகில் குத்தி விட்டுச் சென்றிருக்கிறார்கள். நேர்மையையும் திறமையையும் மட்டுமே வைத்துக் கொண்டு முன் னுக்கு வரவேண்டும் என்று ஒரு பிடி வாதம். 'ஜால்ரா, காக்கா' என்ப தெல்லாம் அவருக்குச்



• கார்த்திக்



• விஸ்வநாதன்

சுத்தமாகப் பிடிக்காது... நாங்கள் சொல்வதெல்லாம் நேர்மையைக் காற்றில் பறக்க விட்டுவிட வேண்டும் என்பதல்ல; காலத்துக்கேற்றபடி சிறிதளவு வளைந்து கொடுக்கலாமே என்பதுதான்!'' என்று படபடவென்று பொரிந்து தள்ளியவர் மது வந்தி; ஒய்.ஜி. மகேந்திரா வின் மகள்!

மகளின் குற்றச் சாட்டுக்களை

• நரசிம்மன்

• லட்சுமி

# அப்பாவிடம் தப்பு என்ன? அலசுகிறது டீன்-ஏஜ்!

யெல்லாம் பொறுமையாகக் கேட்ட ஒய்.ஜி.மகேந்திரா, "என்னுடைய இந்தக் குணங்களெல்லாம்தான் என் மகளுக்குப் பிடிக்கவில்லையென்றால் எனக்கு வருத்தமேயில்லை. தொடர்ந்து அவளுக்குப் பிடிக்காத மாதிரியேதான் நடந்து கொள்வேன்!'' என்று மகளின் வாயை அடைத்து விட்டார்.

"அதது அந்தந்த இடத்தில் இருக்க வேண்டும். வீடு படு சுத்தமாக இருக்க வேண்டும். எனவே அவர் கண்ணுக்குக் குப்பை என்று தெரிகிற பொருள்களையெல்லாம் குப்பைக் கூடையில் தூக்கிப் போட்டு விடுவார். ஒரு முறை அப்படித்தான் என் நண்பன் எனக்குக் கொடுத்த புத்தகத்தைக் கூட குப்பைக் கூடையில் எடுத்துப் போட்டுவிட்டார்!'' என்று



• அனந்தராமன்



• அனில்

வருத்தப்பட்ட அனில், "தான் நினைத்தது நினைத்தபடியே நடக்கா விட்டால் அவருக்கு வருமே பாருங்கள் அப்படியொரு கோபம்... அதுவும் எனக்குச் சுத்தமாகப் பிடிக்காது!" என்றான்.

அப்பா அனந்தராமனும் சளைக்கவில்லை. "இப்போது எல்லோரும் சுற்றுப்புறச் சூழல் பற்றி வாய் கிழியப் பேசுகிறோமே, அந்தச் சுகாதாரத்தை முதலில் வீட்டிலிருந்துதானே ஆரம்பிக்க வேண்டும்! அலுவலகங்களில் வேலைத் திறன் குறைந்து போய் விட்டதாகச் சொல்கிறோம். காரணம் என்ன? சிறுவயதிலிருந்தே ஒரு குறிப்பிட்ட வேலையைக் குறிப்பிட்ட நேரத்தில் சரியாகச் செய்யக் கற்றுக் கொள்ளாமல் போனதுதான். அதைக் குழந்தைகளுக்குப் பெற்றோர் கற்றுத் தருவது அவசியம். அதைத்தான் நான் கற்றுத் தருகிறேன். அது கண்டிப்பா என்ன!"– அனிலின் குற்றச்சாட்டுகளுக்குப் பதிலளித்த அனந்தராமன், தமது முன்கோபம் பற்றிய குற்றச்சாட்டை ஒப்புக் கொண்டார். "அலுவலகத்தில் உள்ள டென்ஷனை வீட்டில் கொண்டு வந்துதானே கொட்ட வேண்டியிருக்கிறது! அங்கே கத்தினால் யார் கேட்பார்கள்?" என்று தமாஷாக முடித்து விட்டார்.

"ஒரு பிரச்னை என்று வரும்போது விவாதத்துக்கு இடமளிக்க வேண்டாமா? அதுதான் இல்லை என் அப்பாவிடம். தமது கருத்துத்தான் இறுதித் தீர்ப்பு; அதற்கு அப்பீலே கிடையாது என்பதுபோல் சொல்லி விடுவார். அதனால் என் கருத்துக்களைச் சொல்வதற்கு வாய்ப்பே கிடைக்காது!"

– இது பிளஸ் டூ முடித்து விட்டுக் கல்லூரியில் அடியெடுத்து வைக்கப் போகும் லட்சுமியின் குற்றச்சாட்டு.

தமது மகள் பூடகமாகக் குறிப்பிடுவதை 'டக்' கென்று புரிந்து கொண்ட நரசிம்மன், "இப்போது எங்கள் வீட்டில் நடந்து கொண்டிருப்பதைத்தான் குறிப்பிடுகிறாள், அவள். கணக்கு அல்லது கம்ப்யூட்டர் சயன்ஸ் எடுத்துக் கொள்வதாகச் சொல்கிறாள் அவள். அதற்கெல்லாம் பிற்காலத்தில் 'ஸ்கோப்' கிடையாது என்பது என் முடிவு. இது நானே தன்னிச்சையாக எடுத்த முடிவல்ல; அந்தந்தத் துறை வல்லுனர்களிடம் கலந்து பேசி எடுத்த முடிவு. இருந்தாலும் அந்தத் துறைகளுக்கு நான் அவளை அப்ளை செய்யக் கூடாது என்றா சொல்கிறேன்? ஒவ்வொருவருக்கும் எதில் அதிக ஆர்வமிருக்கிறதோ அதைத் தேர்ந்தெடுப்பதுதான் சிறந்தது என்பதுதான் எனது கருத்தும் கூட. இருப்பினும் அனுபவ முதிர்வில்லாத இளைய தலைமுறையினர், அனுபவ ரீதியாக வரும் பெற்றோரின் கருத்துக்களைக் கேட்டுக் கொள்வதில் என்ன தவறு! But my daughter has every right to express such a wrong opinion" என்று முடித்தார்.

"என்னைப் பொறுத்த வரை மட்டுமல்ல; எங்கள் வீட்டைப் பொறுத்த வரையே, it is my father's silence that kills us" என்று அதிரடியாக ஆரம்பித்தான் மனோஜ்.

"மாலையில் வீட்டுக்கு வந்ததும் டீவி. முன்னால் பேசாமல் உட்கார்ந்து விடுவார், அங்கு இங்கு திரும்பாமல், ஒரு வார்த்தை பேசாமல்! அதனால் ஆபீஸில் ஏதேனும் பிரச்னையோ என்று எங்களுக்கெல்லாம் டென்ஷனாகிவிடும். எங்களுக்குள் பேசிக் கொள்ளக் கூடத் தோன்றாது. வீட்டில் ஏதாவது ஒரு பிரச்னையென்றாலும் மூத்த மகன் என்கிற முறையில் என் தலைதான் வடிகால். அதுவும் நண்பர்கள், உறவினர்கள் சுற்றி இருக்கும்போது, அப்பா என்னைக் கடுமையாகத் திட்டி விட்டால் எனக்கு சர்வ நாடியும் ஒடுங்கிப்போய் விடும்!"

மகனின் இந்தக் குற்றச் சாட்டுக்களைக் கேட்டு முதலில் திகைத்துப் போன மனோகரன், பிறகு பிரச்னையை அக்குவேறு ஆணி வேறாக அலச ஆரம்பித்து விட்டார்.

"நானும் என் மனைவியும் கிராமத்தில் வளர்ந்தவர்கள்; அங்கெல்லாம் பெற்றோர்களுக்கு முன்னால் நின்று பேசுவது கூட அவர்களை எதிர்த்துப் பேசுவதாகத்தான் அர்த்தம். அப்படிப்பட்ட நெறிமுறைகளை இன்றைய தலைமுறையினரிடம் எதிர்பார்க்க முடியாதுதான் என்றாலும் அவர்களுக்கு முழு சுதந்திரம் கொடுக்கவும் முடியவில்லை. மேல்நாட்டுக் கலாசாரத்தை நோக்கிப் போய்க் கொண்டிருக்கும் நமது கலாசார மாறுதல்கள் காரணமாக, எங்கே கட்டுப்பாடு முடிந்து சுதந்திரம் துவங்குகிறது என்பதில் பெற்றோருக்கும் குழப்பம்; குழந்தைகளுக்கும் குழப்பம்!" என்றவர், "மற்றவர்கள் முன்னால் கடிந்து கொள்வது, இத்தனை தூரம் அவனைப்பாதிக்கும் என்பதை நான் இது வரை உணராமல் போய் விட்டேன். இனி மேல் இந்தத் தவறைச் செய்யமாட்டேன்!" என்று வெளிப்படையாகப் பேசி நெகிழ்த்தி விட்டார்!

**– நிர்மலா சக்கரவர்த்தி.**

அட்டையில் : **ஒய்.ஜி. மகேந்திரா, மதுவந்தி.**

அட்டை வண்ணப்படமும் படங்களும் : **கேமரா திருஞானம்**

# ராணி மகா ராணி

**க**மிஷ்னர் சாமிக்கு,

வணக்கமுங்க. தெரியாத்தனமா இந்தப் படத்த பாத்துட்டேங்க. நம்ம நெலம ஏன் இப்படி இருக்குதுங்க? ஒரு காலத்துல போலீஸ்னா பயந்தாங்க, மதிச்சாங்க. இப்ப அவமானப்படுத்த ஒரு அளவே இல்லாம போயிடுச்சி சாமி!

ஒரு வூட்ல பெரிய மருமக செத்துப் பூட்டாளாம். அது கொலையான்னு கண்டுகுனு வர ராதிகா இன்னா இன்னாமோ டகுலு வேலெல்லாம் செஞ்சி வூட்டுக்கு வராங்களாம். அந்த வூட்ல ஒரு மாமனாரு. மணிவண்ணன். வூடு மொத்தம் அவரு ராஜ்ஜியம். அந்தாளையும் மடக்கிப் போட்டு, உண்மையை கண்டு பிடிக்கறாங்களாம். அதுக்குள்ள சொதப்போ சொதப்பல். படம் முடிய சொல்ல, ஆயுள் கைதியா இருந்து ரிலீஸ் ஆன சந்தோசம்.

இதுல என்ன வெவகாரம்னா, இது காமெடி படமா, சீரியஸ் படமான்னே டவுட்டு. திருவல்லிக்கேணி சந்துங்க மாதிரி எக்கச்சக்க டர்னிங்குங்க. சரி, படம் முடிஞ்சிச்சாங்காட்டியும்னு நெனைக்க சொல்ல, திடீர்னு ஒரு பிளாஷ் பேக். ஒரு கதை. அப்பால ஒரு பைட்டு. தாங்கல சாமி.

ரகுவரன் ஹீரோவாம். போலீஸ் இன்ஸ்பெக்டரு. மேலுக்கும் கீழுக்கும் நடக்கறாரு. இல்ல பேஸ்த் அடிச்சா மாதிரி நிக்கறாரு. இதில்லாம ஸ்ரீவித்யா, தியாகு, சார்லினு பெரிய ஜமா வேற.

படம் முச்சூடும் ராதிகாவத்தான் நம்பிக்கிறாங்க. அடாவடி பார்ட்டியா வந்து, திடீர்னு பழைய எம்.ஜி.ஆர் படம் கணக்கா, 'நான்தான் கிரைம் பிராஞ்ச் போலீஸ்'னு கார்டு தூக்கி காட்றாங்க. பெரிய சஸ்பென்ஸாம். சகிக்கலைங்க. மணிவண்ணன்



அசால்டா கலக்கறாரு. ஆனா இன்னா பிரயோஜனம்? சரியான சப்போர்ட்டு இல்லே.

பாட்டுங்களெல்லாம் காலி. ஒப்புக்குச் சப்பா பைட்டு. ஒரு காலத்துல, டைரக்டர் நல்ல டைலாக் எழுதுவாருன்னு கேள்வி. இதுல அதுவும் மிஸ்ஸிங்.

புள்ளகுட்டிங்களோட எதுக்கு படத்துக்குப் போறோம்? கொஞ்சம் ஜாலியா இருக்கலான்னுதானே. அதிலியே மண்ணள்ளி போட்டா என்னாங்க செய்றது? எங்கங்க போய் கம்ப்ளெய்ண்ட் குடுக்கறது? சாமிதான் பாத்து ஏதாவது செய்யணும்.

மனசு நோவோடு,

மண்ணடி மன்னாரு.

- துளசி



இது தெள்ளத் தெளிவு. ஒரு இந்திய பிராண்ட்
காத்திருக்கிறது சர்வதேச போட்டிக்காக

சிகரத்தின் உச்சியிலே தனித்து நிற்கும் ஒனிடா கேஒய்.
தன்னிகரற்ற டிவியின் அனைத்து சிறப்பம்சங்களுடன் காத்திருக்கிறது.

சரி நிகர் போட்டிக்காக ... கடுமையான சவாலுக்காக.

சவால் எனில் எப்படிப்பட்ட பிராண்டுகளிடமிருந்து ...
ஒனிடா கேஒய்யின் மகா சக்தி வாய்ந்த மாஸ்டர் கமாண்ட் கன்ட்ரோல் ...

உலகின் முதன் முதலான கராவ்கே தேர்வுடன் கூடிய
53 செமீ டிவியின் வெல்ல முடியாத தரம்...

அல்லது வீட்டிலேயே அரங்க ஒலியின் அனுபவத்தைத்
தரும் இதன் ஜி-ஹார்ன் ஒலி.




இவற்றைக் கண்டு மிரளாத பிராண்டுகளிடமிருந்து.
உலகிலே முன்னேற்றம் கண்ட சில நாடுகளில்
இப்போது இதே போன்ற பிராண்டுகள்
மெதுவே தலை தூக்கி இருக்கலாம்.

ஆனால் அவற்றோடும் போட்டியிடத் துடியாய் துடிக்கிறது
ஒனிடா கேழய். வெற்றி வாகை சூடப்போவது ஒனிடாதான்...
மற்றவரை காக்கப்போவது கடவுள்தான்.

இந்தியாவிற்குப் பெருமை .. உலகிற்குப் பொறாமை

## 32. உறையூர் சிறைச்சாலை

விக்கிரமன் உறையூர் சிறைச்சாலையில் ஒரு தனி அறையில் அடைக்கப்பட்டிருந்தான். சிங்காதனம் ஏறிச் செங்கோல் செலுத்த வேண்டிய ஊரில் சிறையில் அடைக்கப்பட்டுக் கிடப்பதை நினைத்து அவன் துயரச் சிரிப்புச் சிரித்தான். அவனுடைய தந்தை அரசு செலுத்திய காலத்து ஞாபகங்கள் அடிக்கடி வந்தன. பார்த்திப மகாராஜா போர்க்கோலம் பூண்டு கிளம்பிய காட்சி அவன் மனக்கண் முன்னால் பிரத்யட்சமாக நின்றது. அதற்கு முதல்நாள் மகாராஜா இரகசிய சித்திர மண்டபத்துக்குத் தன்னை அழைத்துச் சென்று தம்முடைய கையால் எழுதிய கனவுச் சித்திரங்களைக் காட்டியதெல்லாம் ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தன. ஐயோ! அவையெல்லாம் 'கனவாகவே போக வேண்டியதுதான் போலும்!' தந்தைக்குத் தான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றலாமென்னும் ஆசை அவனுக்கு இதுவரையில் இருந்தது. இப்போது அடியோடு போய்விட்டது. பல்லவ சக்கரவர்த்தியின் கட்டளையை எதிர்பார்த்து இந்தச் சிறைச்சாலையில் எத்தனை நாள் கிடக்க வேண்டுமோ தெரியவில்லை. அவரிடமிருந்து என்ன கட்டளை வரும்? மரண தண்டனையை நிறைவேற்றும்படி தான் அநேகமாகக் கட்டளை வரும். மாரப்பன் அந்தக் கட்டளையை நிறைவேற்றச் சித்தமாயிருப்பான். தன்னுடைய கதியைப் பற்றி யாருக்கும் தெரியவே போவதில்லை. பார்த்திப மகாராஜாவின் பெயராவது ஜனங்களுக்குச் சில காலம் ஞாபகம் இருக்கும். தன் பெயரைக் கூட எல்லோரும் மறந்து விடுவார்கள்.

செண்பகத் தீவிலிருந்து ஏன் திரும்பி வந்தேன்? - என்னும் கேள்வியை விக்கிரமன் அடிக்கடி கேட்டுக் கொண்டான். சின்னஞ்சிறு தீவாயிருந்தாலும் அங்கே சுதந்திர ராஜாவாக ஆட்சி செய்தது எவ்வளவு சந்தோஷமாயிருந்தது! அதைவிட்டு இப்படித் தன்னந்தனியே இங்கே வரும் பைத்தியம் தனக்கு எதற்காக வந்தது?

அந்தப் பைத்தியத்தின் காரணங்களைப் பற்றியும் அவை எவ்வளவு தூரம் நிறைவேறின என்பது பற்றியும் விக்கிரமன் யோசித்தான். செண்பகத் தீவிலிருந்தபோது பொன்னி நதியையும் சோழவள நாட்டையும் எப்போது பார்க்கப் போகிறோம் என்ற ஏக்கம் மீண்டும் மீண்டும் அவனுக்கு ஏற்பட்டு வந்தது. ஆனால், சோழ நாட்டின் மேல் அவனுக்கு எவ்வளவு ஆசை இருந்தாலும் சோழ நாட்டு மக்கள் சுதந்திரத்தை மறந்து, வீரமிழந்து பல்லவ சக்கரவர்த்திக்கு உட்பட்டிருப்பதை நினைக்க நினைக்க அவன் வெறுப்பு அடைவதும் உண்டு. அந்த வெறுப்பு இப்போது சிறையில் இருந்த சமயம் பதின்மடங்கு அதிகமாயிற்று. வீரபார்த்திப மகாராஜாவின் புதல்வன் உள்ளூர்ச் சிறைச் சாலையில் இருப்பதைக் கூடத் தெரிந்து கொள்ளாமல்தானே இந்த ஜனங்கள் இருக்கிறார்கள்.

தாயாரைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை ஒன்று இருந்தது. அதுவும் நிறைவேறவில்லை. நிறைவேறாமலே சாகப் போகிறோமோ, என்னவோ?

அப்புறம், குந்தவி! - அவளை நினைக்காமலிருப்பதற்கு விக்கிரமன் ஆனமட்டும் முயன்றான். ஆனால் முடியவில்லை. குந்தவியை நினைத்ததும், விக்கிரமனுக்குப் பளிச்சென்று ஓர் உண்மை புலனாயிற்று. செண்பகத் தீவிலிருந்து கிளம்பி வந்ததற்குப் பல காரணங்களை அவன் கற்பித்துக் கொண்டிருந்தானென்றாலும், உண்மையான காரணம் - இப்போது தெரிய வந்தது. குந்தவிதான் அந்தக் காரணம். இரும்பு மிகவும் வலிமை வாய்ந்ததுதான்; ஆனாலும், காந்தத்தின் முன்னால் அதன் சக்தியெல்லாம் குன்றி விடுகிறது. காந்தம் இழுக்க, இரும்பு ஓடி வருகிறது. குந்தவியின் சந்திரவதனம் - சீ, இல்லை! - அவளுடைய உண்மை அன்பு தன்னுடைய இரும்பு நெஞ்சத்தை இளக்கி விட்டது. அந்தக் காந்த சக்திதான் தன்னைச் செண்பகத் தீவிலிருந்து இங்கே இழுத்துக் கொண்டு வந்தது. ஜுரமாகக் கிடந்த தன்னை எடுத்துக் காப்பாற்றியவள் அவள் என்று தெரிந்த பிறகுகூட விக்கிரமனுக்குக் குந்தவியின் மேல் கோபம் இருந்தது; தன்னுடைய சுதந்திரப் பிரதிக்ஞையை நிறைவேற்றுவதற்கு அவள் குறுக்கே நிற்பாள் என்ற எண்ணந்தான் காரணம். ஆனால், கடைசி நாள் அவளுடைய பேச்சிலிருந்து அது தவறு என்று தெரிந்தது. 'இவரை மன்னிக்கும்படி நான் என் தந்தையிடம் கேட்கமாட்டேன்; ஆனால் மரண தண்டனையை நிறைவேற்றுவதற்கு முன்னால் இவரை மணம் புரிந்து கொள்ள அனுமதி கேட்பேன்' என்று எவ்வளவு கம்பீரமாய்க் கூறினாள்! இத்தகைய பெண்ணின் காதலை அறிவதற்காகச் செண்பகத் தீவிலிருந்துதானா வரலாம்? சொர்க்க லோகத்திலிருந்து கூட வரலாமல்லவா?

ஆகா! இந்த மாரப்பன் மட்டும் வந்து குறுக்கிட்டிராவிட்டால், குந்தவியும் தானும் வருகிற அமாவாசையன்று கப்பலேறிச் செண்பகத் தீவுக்குக் கிளம்பியிருக்கலாமே!

அமாவாசை நெருங்க நெருங்க, விக்கிரமனுடைய உள்ளக் கிளர்ச்சி அதிகமாயிற்று. அமாவாசையன்று செண்பகத் தீவின் கப்பல் மாமல்லபுரம் துறைமுகத்துக்கு வரும். அப்புறம் இரண்டு நாள் தன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும். எப்படியாவது இச் சிறையிலிருந்து தப்பி அமாவாசையன்று மாமல்லபுரம் போகக் கூடுமானால்!

இவ்விதம், விக்கிரமன் எண்ணாததெல்லாம் எண்ணினான். ஒவ்வொரு நிமிஷமும் அவனுக்கு ஒரு யுகமாயிருந்தது. கடைசியில் அமாவாசைக்கு முதல் நாள் மாலை மாரப்ப பூபதி வந்தான். விக்கிரமனைப் பார்த்து நகைத்துக் கொண்டே, "ஓ! இரத்தின வியாபாரியாரே! காஞ்சியிலிருந்து கட்டளை வந்து விட்டது" என்றான்.

ஒரு கணம் விக்கிரமன் நடுங்கிப் போனான். கட்டளை என்றதும், மரண தண்டனை என்று அவன் எண்ணினான். மரணத்துக்கு அவன் பயந்தவனல்ல என்றாலும், கொலையாளிகளின் கத்திக்கு இரையாவதை அவன் அருவருத்தான்.

ஆனால், மாரப்பன், "காஞ்சிக்கு உன்னைப் பத்திரமாய் அனுப்பி வைக்கும்படி கட்டளை. இன்றிரவு இரண்டாம் ஜாமத்தில் கிளம்ப வேண்டும், சித்தமாயிரு" என்றதும் விக்கிரமனுக்கு உற்சாகம் பிறந்தது. வழியில் தப்புவதற்கு எத்தனையோ சந்தர்ப்பங்கள் நேரிடலாமல்லவா? அல்லது போராடி வீர மரணமாவது அடையலாமல்லவா? இது இரண்டும் சாத்தியமில்லாவிட்டால், சக்கரவர்த்தியின் முன்னிலையில் இன்னொரு தடவை, "அடிமை வாழ்வை ஒப்புக் கொள்ளமாட்டேன்; சுதந்திரத்துக்காக உயிரை விடுவேன்" என்று சொல்வதற்காவது ஒரு சந்தர்ப்பம் ஏற்படலாமல்லவா? ஆகா! குந்தவியும் பக்கத்தில் இருக்கும்போது இம்மாதிரி மறுமொழி சொல்வதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால் அதை விடப் பெரிய பாக்கியம் வேறு என்ன இருக்க முடியும்?

## 33. அமாவாசை முன்னிரவு

அன்றிரவு ஒரு ஜாமம் ஆனதும் சிறைச்சாலைக் கதவு திறந்தது. மாரப்பனும் ஆயுதந் தரித்த வீரர் சிலரும் வந்தார்கள். விக்கிரமனுடைய கைகளைச் சங்கிலியால் பிணைத்து வெளியே அழைத்துச் சென்றார்கள். வாசலில் கட்டை வண்டி ஒன்று ஆயத்தமாய் நின்றது. அதில் விக்கிரமன் ஏறிக் கொண்டான். அவனுக்கு முன்னும் பின்னும் வண்டியில் சில வீரர்கள் ஏறிக் கொண்டார்கள். அவ்விதமே வண்டிக்கு முன்னாலும் பின்னாலும் சிலர் நின்றார்கள்.

சிறைவாசலில் மாரப்பன் அந்த வீரர்களின் தலைவனாகத் தோன்றியவனைக் கூப்பிட்டு அவன் காதோடு ஏதோ இரகசியமாகச் சொன்னான். பிறகு உரத்த குரலில், "கிளம்பலாம்!" என்றான்.

உடனே வண்டிக்காரன் வண்டியை ஓட்ட, முன்னாலும் பின்னாலும் நின்ற வீரர்களும் போகத் தொடங்கினார்கள்.

உறையூர் வீதிகளின் வழியாக வண்டி போய்க் கொண்டிருந்தது. முன்னெல்லாம் போல் இப்போது இரவில் விளக்குகள் எரியாமல் இருளடைந்துகிடப்பதைப் பார்த்ததும், விக்கிரமனுக்கு என்னவோ செய்தது! ஆகா! சோழ நாட்டுத் தலைநகரமான உறையூர்தானா இது?

"ஏனுங்க சாமிங்களே! இந்தப் பிள்ளையாண்டான் யாரு? இவனை எங்கே அழைத்



துப் போறீங்க?'' என்ற பேச்சைக் கேட்ட விக்கிரமன் திடுக்கிட்டான். பேசியவன் வண்டிக்காரன்தான். ஆனால், அந்தக் குரல் பொன்னன் குரலாக அல்லவா இருக்கிறது? அப்படியும் இருக்க முடியுமா?

வீரர்களில் ஒருவன், "உனக்கு ஏன் அப்பா இந்த வம்பு? பேசாமல் வண்டியை ஓட்டு!'' என்றான். அதற்கு வண்டிக்காரன், "எனக்கு ஒன்றுமில்லை, அப்பா! ஆனால் ஊரெல்லாம் பேசிக்கிட்டிருக்காங்க, யாரோ செண்பகத் தீவிலிருந்து வந்த ஒற்றனாம்! சக்கரவர்த்தி மகள் குந்தவி தேவியையே ஏமாற்றி விட்டானாம். அப்பேர்ப்பட்டவனை நம்ம சேனாதிபதி கண்டு பிடித்து விட்டாராம். அப்படியெல்லாம் ஊரிலே பேச்சாயிருக்கே, அவன் தானா இவன் என்று கேட்டேன்'' என்றான்.

"ஆமாம். அவன்தான் என்று வைத்துக் கொள்ளேன்'' என்றான் ஒரு வீரன்.

"எங்கே அழைத்துக் கொண்டு போறீங்களோ?'' என்று வண்டிக்காரன் கேட்க, "எங்கே அழைத்துக் கொண்டு போவாங்க? காஞ்சிமா நகருக்குத்தான்'' என்று மறுமொழி வந்தது.

"அடே அப்பா! அவ்வளவு தூரமா போக வேண்டும்? நீங்கள் ஏழெட்டுப் பேர் காவலுக்குப் போறீங்களே, போதுமா? வழியிலே இவனுக்கு யாராவது ஒத்தாசை செய்து தப்பிச்சுவிட்டு விட்டாங்கன்னா என்ன செய்வீங்க?'' என்றான் வண்டிக்காரன்.

பேசுகிறவன் உண்மையில் பொன்னன்தானோ? தனக்குத்தான் சமிக்ஞை செய்தி தெரிவிக்கிறானோ? வழியில் வந்து ஒத்தாசை செய்வதாகக் கூறுகிறானோ? - இவ்விதம் விக்கிரமன் வியப்புடன் எண்ணமிட்டுக் கொண்டிருக்கும் போது, சற்றுப் பின்னால் வந்த வீரர் தலைவன், "யார் அங்கே? என்ன பேச்சு!'' என்று அதட்டவே, மௌனம் குடி கொண்டது. பிறகு வண்டிக்



காரனாவது வீரர்களாவது பேசவில்லை.

காவேரிக் கரைக்கு வந்ததும் வண்டி நின்றது. விக்கிரமனும் வண்டியிலிருந்த வீரர்களும் இறங்கினார்கள். ஆற்றங்கரையோரமாக ஒரு படகு ஆயத்தமாயிருந்தது. அங்கே ஒருவன் கையில் தீவர்த்தியுடன் நின்று கொண்டிருந்தான்.

எல்லாரும் கீழிறங்கியதும் வண்டிக்காரன் வண்டியைத் திருப்பிக் கொண்டே, "போயிட்டு வரீங்களா? ஒற்றனை ஜாக்கிரதையாகக் கொண்டு போய்ச் சக்கரவர்த்தியிடம் சேருங்கள், ஐயா! வழியில் ஒரு காட்டாறு இருக்கிறது. பத்திரம்!" என்றான். அப்போது தீவர்த்தி வெளிச்சம் அவன் முகத்தின் மேல் அடித்தது. விக்கிரமனுக்கு அந்த முகத்தைப் பார்த்ததும் பெரும் ஏமாற்றமுண்டாயிற்று. ஏனெனில், அவன் பொன்னன் இல்லை. ஆனால் அவனுடைய கண்களில் அந்த ஒளி - எங்கேயோ பார்த்த முகமாயிருக்கிறதே? - சட்டென்று உண்மை புலனாயிற்று. பொன்னன் தான் அவன். முகத்தில் பொய் மீசை வைத்துக் கட்டிக் கொண்டிருக்கிறான். அவன் கூறிய வார்த்தைகளின் பொருள் என்ன? வழியில் காட்டாற்றின் சமீபத்தில் தன்னை விடுவிக்க வருவதாகத் தான் சொல்லியிருக்க வேண்டும். இந்த எண்ணத்தினால் விக்கிரமனுக்கு மிகுந்த உற்சாகம் உண்டாயிற்று.

**ப**டகில் ஏறி ஆற்றைக் கடந்தபின் அவர்கள் நடுஜாமம் வரையில் கால்நடையாகப் பிரயாணம் செய்தார்கள். பிறகு சாலையோரம் இருந்த ஒரு மண்டபத்தில் படுத்துத் தூங்கினார்கள்.

மீண்டும் அதிகாலையில் எழுந்து மாட்டு வண்டி பிடித்துக் கொண்டு பிராயணமானார்கள். அன்று பொழுது சாயும் சமயத்தில் பராந்தகபுரத்தைத் தாண்டினார்கள்.

இனிச் சிறிது தூரத்தில் காட்டாறு வந்துவிடும் என்று விக்கிரமன் ஒருவாறு தெரிந்து கொண்டிருந்தான். அந்த வண்டிக்காரன் பொன்னனாயிருக்கும் பட்சத்தில், இங்கேதான் தனக்கு உதவி வரவேண்டும். "யார் வருவார்கள்; எப்போது வருவார்கள்?" என்றெல்லாம் எண்ணி விக்கிரமனுடைய உள்ளம் பரபரப்பை அடைந்தது.

அஸ்தமித்து இரண்டு நாழிகை இருக்கும். அந்த அமாவாசை இருட்டில் சாலையில் ஜனநடமாட்டம் அதிகமாயிருந்ததைக் கண்டு விக்கிரமன் வியந்தான். ஆங்காங்கு சிறுசிறு கும்பலாக ஜனங்கள் போய்க் கொண்டிருந்தார்கள். கோயிலுக்குப் போகிறவர்களைப் போல் அவர்கள் காணப்பட்டார்கள். வெறிபிடித்தவர்களைப் போல் ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் போனார்கள். சிலர் மஞ்சள் வஸ்திரம் அணிந்து கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு கும்பலிலும் ஒருவன் தீவர்த்தி பிடித்துக் கொண்டிருந்தான். இன்னும் இந்தக் கும்பல்களில் சிலர் நீண்ட கத்திகளை எடுத்துச் சென்றது விக்கிரமனுக்கு ஒருவாறு பயங்கரத்தையளித்தது. இவர்களெல்லாம் எங்கே போகிறார்கள்? கையில் கத்திகளை என்னத்திற்குக் கொண்டு போகிறார்கள்?

இந்தக் காட்சிகளைப் பார்த்த மாரப்பனுடைய வீரர்கள் தங்களுக்குள் இரகசியமாகப் பேசிக் கொண்டதில் சில வார்த்தைகள் விக்கிரமனுடைய காதிலும் விழுந்தன. "பத்திரகாளி" "நரபலி", "கபால பைரவர்" என்னும் சொற்கள் அவனுக்குத் திகைப்பையும் பயத்தையும் உண்டாக்கின. மகேந்திர மண்டபத்தின் வாசலில் மகா கபால பைரவரும், மாரப்பனும் பேசிக் கொண்டது அவனுக்கு நினைவு வந்தது. ஓஹோ! இன்றைக்கு அமாவாசை இரவல்லவா? மாரப்பன் ஒருவேளை தன்னைக் காஞ்சிக்கு அனுப்புவதாகச் சொல்லி உண்மையில் கபால பைரவனின் பலிக்குத்தான்

# அருள்வாக்கு



'எங்கோ தூரத்தில் இருக்கிறான் ஸ்வாமி என்று ஊரெல்லாம் சுற்றுகிறாயே! தெரியாதவரையில் அவன் தூரத்தில் இருப்பவன்தான். ஊரெல்லாம் சுற்றினாலும் அவனைப் பார்க்க முடியாது. அவன் உன்கிட்டேயே இருப்பவன்தான். தூராத் தூரே அந்திகே ச - தூரத்திற்கெல்லாம் தூரம், சமீபத்திற்கெல்லாம் சமீபம்', என்று ச்ருதி சொல்கிறது.

ஹொரைஸன் என்பார்களே, தொடுவானம்; இங்கிருந்து பார்த்தால் ஆகாசமும் பூமியும் அந்த இடத்தில் சேருவதுபோல இருக்கும். அங்கே ஒரு பனைமரம் இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். 'அந்தப் பனை மரத்தடிக்குப் போனால், பூமியும் வானமும் சேருகிற இடத்தைப் பிடித்து விடலாம்' என்று இங்கே இருந்து பார்க்கிறபோது நமக்குத் தோன்றும். ஆனால் அங்கே போனால், தொடுவானமும் அங்கிருந்து வெகுதூரத்திற்கு அப்பால் போய்விட்டது போலத் தெரியும். நாம் போகப் போக அதுவும் போய்க் கொண்டே இருக்கும். 'இந்தப் பனைமரத்தில் வந்து நின்றால் தொடுவானம் வெகுதூரத்திற்குப் போய்விட்டதே, அதைப் பிடிக்க இன்னும் நாமும் போக வேண்டும்' என்று போய்க் கொண்டிருந்தால், அதைப் பிடிக்க முடியுமா? இந்தப் பனை மரத்துக்கு வெகு தூரத்தில் இருந்து பார்க்கும்போது இந்த இடத்தில்தான் தொடுவானம் இருப்பதுபோல இருந்தது. இந்த இடத்திற்கு வந்தவுடன், அது நம்மைவிட்டு இன்னும் வெகு தூரத்திற்குப் போய்விட்டது போலத் தெரிகிறது. ஆகவே அது எங்கே இருக்கிறது? நீ இருக்கிற இடத்தில்தான் இருக்கிறது. நீ இருக்கிற இடந்தான் அது. அப்படி 'அது' 'அது' என்று சொல்லப்படுகிற, வெகு தூரத்தில் இருக்கிற ஸ்வாமி, உன்கிட்டேயே - உன் உள்ளேயே இருக்கிறது. 'நீயே அதுதான்' என வேதம் உணர்த்துகிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

அனுப்பியிருப்பானோ! - இவ்விதம் அவன் எண்ணிக் கொண்டிருக்கும்போதே "ஓம் காளி! ஜய காளி!" என்ற பல குரல்களின் ஏகோபித்த கோஷம் அவன் காதில் விழுந்து, மயிர்க்கூச்சு உண்டாக்கிற்று. அவ்விதம் கோஷித்தவர்கள் அடுத்த நிமிஷம் விக்கிரமன் இருந்த வண்டியைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்கள் கையில் நீண்ட கூரிய கத்திகள் நட்சத்திர வெளிச்சத்தில் மின்னியது தெரிந்தது. "ஓம் காளி, ஜயகாளி" என்ற கோஷங்களுக்கு மத்தியில் "எங்கே பலி?" என்று ஒரு பயங்கரமான குரல் கேட்டது.

இதற்குள் வண்டிக்கு முன்னாலும் பின்னாலும் வந்த உறையூர் வீரர்கள் ஒரே ஓட்டமாய் ஓடிவிட்டார்கள். வண்டியில் இருந்தவர்களும் தொப்புத் தொப்பென்று குதித்து ஓட்டம் பிடித்தார்கள். வண்டிக்காரன் அந்தர்த்தானமாகிவிட்டான். விக்கிரமன் கைகள் சங்கிலிகளால் வண்டியின் சட்டத்துடன் பிணைக்கப்பட்டிருந்தமையால் அவனால் மட்டும் வண்டியிலிருந்து குதிக்க முடியவில்லை. அப்போது வண்டியின் பின்புறத்தில் ஒரு குரல், "மகாராஜா! பதற வேண்டாம்! நான்தான்" என்றது. உடனே பொன்னன் வண்டியில் ஏறிச் சங்கிலிகளை அவிழ்த்தெறிந்தான். விக்கிரமன் வண்டியிலிருந்து குதித்ததும், இரண்டு உயர்ஜாதிக் குதிரைகள் சித்தமாய் நிற்பதைக் கண்டான். "மகாராஜா! ஏறுங்கள் குதிரை மேல்; ஒரு கணமும் தாமதிப்பதற்கில்லை!" என்றான் பொன்னன்.

(தொடரும்)



# அஷ்டமி, நவமி எந்த மதத்திற்கும் சொந்தமில்லை

அஷ்டமி என்பது பிரதமி திதியிலிருந்து எட்டாம் நாள். நவமி என்பது பிரதமியிலிருந்து ஒன்பதாம் நாள். இந்த நாட்களில் கடவுளை எந்த ரூபத்தில் வேண்டுமானாலும் வழிபட்டால் அதிக பலன் கிடைக்கும்.

இந்த வழிபாடு முடிந்தவுடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்

திருமண வைபவங்களுக்கு:- சீர் முறுக்கு, சீர் அதிரசம், சீர் முள்ளுத் தேன்குழல், சீர் அப்பம், திரட்டுப்பால், பருப்புத் தேங்காய், அப்பம் வகைகள் செய்துத் தரப்படும்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை - 20.
போன் : 4915662, 4914213



# இருட்டுத் திரைகள்

**கோ**டையின் வெப்பம் அதிகரிக்க ஆரம்பித்து விட்டது. அந்தப் பழைய ஆஸ்பத்திரிக்கே உரிய நெடியிலும் வெப்பம் தெரிந்தது. நேற்றிரவு பூராவும் மெனின்ஜைடிஸ் நோயால் அவதிப்பட்ட ஒரு சிறுமியின் உயிரைக் காப்பாற்றப் போராடித் தோற்றுப் போனேன். எல்லாமே வீண்.

அவளது மரணம் என்னுள் ஒரு சலிப்பைத் தோற்றுவித்திருந்தது.

இயலாமை என் சோர்வை அதிகமாக்கியது. நான் ஏன் மருத்துவப் படிப்பைத் தேர்ந்தெடுத்தேன்? மனிதனின் நம்பிக்கைக்கும் போராட்டங்களுக்கும் சாவு எக்காளமிட்டுச் சவால் விடுகிறதோ?

விடிந்தும் விடியாத காலைப் பொழுது. தூக்கமும் விழிப்புமாக இருந்தேன். இன்னும் இரண்டே மணி நேரத்தில் எனது 'ட்யூட்டி' முடிந்து விடும். அதிகாலை 'ரவுண்ட்ஸி'ல் நான் பார்த்த முதல் 'பேஷண்ட்' ஆறாம் 'நம்பர்' படுக்கையில் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்த அடைக்கலம்.

அவருக்கு நாற்பது, நாற்பத்தைந்து வயதிருக்கலாம். அவரது விழிகள் - ஆழத்தில் - கிணற்றுக்குள் கிடந்தன. முகத்தில் ஒரு மென்மை. 'அட்மிட்' ஆன நாளிலிருந்து உடல்நிலை கொஞ்சம் கொஞ்சமாக மோசமாகிக் கொண்டிருந்தது. 'ஆக்ஸிஜன் டெண்டி'ற்குள் வைத்திருந்தோம். உற்றுப் பார்த்தேன். உதடுகளில் நீலம். மூச்சு வேகமாகவும், தடைப்பட்டும் வந்து கொண்டிருந்தது. இதயம் சிறு வயதிலேயே பழுதுபட்டுப் போயிருக்க வேண்டும். 'ருமாடிக் ஹார்ட்'! அவரது வேதனை - நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டேயிருந்தது நன்றாகத் தெரிந்தது. 'வாட்ஸ் தி யூஸ் ஆப் ப்ரோலாங்கிங் ஹிஸ் டார்ச்சர்?' - ஆங்கில மருத்துவன் அல்லவா, சிந்தனையும் ஆங்கிலத்தில்தான் வருகிறது!

அடைக்கலத்தின் மனைவியைப் பற்றி எனது சிந்தனை ஓடியது. சிறிய உருவம். வெளுத்துப் போன தலை. உழைப்பும் வறுமையும் அவளது முகத்தில் உழுதிருந்த கோடுகளுக்கு மத்தியிலும் நம்பிக்கை - அசாத்திய நம்பிக்கை!

அவளும் சரி, அவள் கணவனும் சரி என்னை நம்பிக்கையின் கலங்கரை விளக்கமாக எண்ணிக் கொண்டிருக்கிறார்களே... அதுதான் நெருடலான விஷயம்! என்னிடம் அவர்கள் என்ன எதிர்பார்க்கிறார்கள்? கடவுளே! இது என்ன



சோதனை? எனது மனதில், நான் அறிந்த, படித்த சிகிச்சை முறைகள் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டே இருந்தன். எதைக் கொடுத்தால் அவர் பிழைப்பார்? நோயின் கடுமை என்னை அலைக்கழித்து, என் சமநிலையைக் குலைத்துக் கொண்டே இருந்தது.

அவர் மார்பில் கட்டிக் கொண்டிருந்த நீரை வெளியேற்ற ஊசியை ஆழமாகச் செருகினேன். அவரை விட்டு விட்டு மற்ற நோயாளிகளை நோக்கி நகர்ந்தேன்.

ஒரு மணி நேர 'ரவுண்ட்ஸு'க்குப் பிறகு சோர்வுடன் எனது ஓய்வறைக்குத் திரும்பினேன். சில நிமிடங்களில் 'நர்ஸ்' ஓட்டமும் பதற்றமுமாக வந்தாள்.

'ஹெல்ப்!' மனதிற்குள்ளேயே சொல்லிக் கொண்டு அவள் பின்னாலேயே அடைக்கலத்தின் படுக்கையை நோக்கிப் போனேன்.

அவரது தோல் சாம்பல் நிறமாகி இருந்தது. உதடுகளில் அதிக நீலம். கண்களில் பளபளப்பு. இதயம் - கொல்லனின் துருத்தி போல் அடித்துக் கொண்டிருந்தது. 'க்ளக்' 'க்ளக்' - நீரினுள் காற்றுக் குமிழிகள் செல்லும் போது ஏற்படுவது போன்ற ஓசை.

'நர்ஸை' துரிதப்படுத்தினேன். "ஏதாவது செய்! ஏதாவது செய்!" - மனம் அடித்துக் கொண்டது. மறுபடியும் 'டிஜிடாலிஸ்' மருந்துகளை வேகமாகச் செலுத்தினேன். இது வீண் வேலை! தாற்காலிக முயற்சி - எனக்கு நன்றாகவே தெரிந்தது. ஒரு மணி நேரம் அவர் அருகிலேயே கிடந்த நாற்காலியில் சொட்டும் வியர்வையுடன் அமர்ந்து விட்டேன்.

நோயாளி கண் விழித்தார்.

"டாக்டர், என் மனைவியை வரவழையுங்க."

"சரி."

நான் என் அறைக்குப் போகத் திரும்பினேன்.

"க்ளக்!"

"சப்தம். அவரிடமிருந்தா?"

ஆம்! எது நடக்கக் கூடாதென்று மனம் அடித்துக் கொண்டதோ அது நடந்து விட்டது!

"எனது மனைவியைக் கூப்பிடுங்கள்" என்று கூறிய அடைக்கலத்தின் இதயத் துடிப்பு அடங்கிய வினாடிப் பொழுதிற்குள் -

நான் திகைத்தேன். எனது இதயம் கூட சில துடிப்புகளை மறந்து போனது.

'திக்!'

சாவு வென்று விட்டதா?

**கோ. சுந்தரராமன்**

'கூடாது, கூடாது, இவரைச் சாக விடக் கூடாது.' எனக்குள் எழுந்தது கோபமா, இயலாமையா, தோல்வியின் சீற்றமா? - தெரியவில்லை. எதுவாக வேண்டுமானாலும் இருக்கட்டும். இந்த முறை சாவை ஜெயிக்க விட மாட்டேன்! (பேதைமை?) ஆக்ஸிஜன் கூடாரத்தை விலக்கி அவர் மார்பைப் பிசையத் தொடங்கினேன்.

"சிஸ்டர், அட்ரினலின் ப்ளீஸ்!" - கத்தினேனா? நர்ஸ் அட்ரினலினை லோடு செய்த சிரிஞ்சுடன் ஓடி வந்தாள். அவரது மார்பில் ஆழமாக, மிக ஆழமாக ஊசியைச் செலுத்தினேன். 'சட்'டென்று 'சிரிஞ்சை' உருவி விட்டு 'ஸ்டெதஸ்கோப்பை' மார்பில் வைத்துப் பார்த்தேன்.

ஊஹூம்...! சப்தம் இல்லை! ஆனால் மார்பைப் பிசைவதை மட்டும் நிறுத்தவில்லை. - நிமிடத்திற்கு இருபது முறை இருக்கலாம்.

எனது உடல் வியர்த்துப் போனது. கைகள் சோர்ந்து போயின.

"விட்டு விடப்பா! நோ யூஸ்." எனக்குப் பிறகு ட்யூட்டி ஆரம்பிக்க வேண்டிய டாக்டர் வந்து விட்டார் போலும். எனது காதருகே மெல்லச் சொன்னார்.



கணவன் : எதிர் வீட்டுக்காரி என்ன வேலைக்காரி இருக்கும் போதே வாசல் தெளிச்சு கோலம் போடறாங்க?

மனைவி : அவ கையில புதுசா வளையல் ஏறியிருக்கே. அதை எல்லார்கிட்டேயும் காட்டத்தான்!

- சீர்காழி. வி. ரேவதி

---

"இந்த மாதிரி இதயம் நின்னு போனா, எந்த சக்தியாலும் அதை உயிர்ப்பிக்க முடியாது 'ரிலாக்ஸ் மை ப்ஃரெண்ட்'. குடும்பத்தாருக்குத் தெரியப்படுத்தி விடலாம்."

அவரது அனுபவம் பேசியது.

ஆனால் - எனக்கோ? கோபம், ஆத்திரம் - இயலாமை. 'இருட்டுக்குள் அவரைப் போக விட மாட்டேன்!' - எனக்குள்ளேயே சொல்லிக் கொண்டேன். பிறகு? வெளியிலா சொல்ல முடியும்? சிரிக்க மாட்டாரோ?

ஆமாம், 'சாவு' என்பது இருட்டுக் குகையா? யாரிந்த எண்ணத்தை என்னுள் விதைத்தது?

கைகள் மட்டும் அசுரத்தனமாக இயங்கின. என்னையும் மீறிய - மருத்துவ சக்திக்கு அப்பாற்பட்ட ஏதோவொன்று என்னை இயக்கியது. திடீரென்று 'விஸ்க்' - ஒரு சப்தம்!

மெலிதான சப்தம். எனது இதயமே அந்த 'விஸ்க்'கில் நின்று போய் விட்டாற்போன்ற பிரமை! அந்த 'விஸ்க்' சப்தம் மறுபடியும்... மறுபடியும்... 'விஸ்க், விஸ்க்' - ஆண்டவனே!

"சிஸ்டர் என் காதுகளில் ஸ்டெத்தைப் பொருத்துங்கள். அவர் மார்பில் டையாப்ஃரம்! என்னை ஒரு கிறுக்கனைப் பார்ப்பது போல் பார்த்தாலும், 'நர்ஸ்' நான் சொன்னதைச் செய்தாள். நான் 'பம்ப்' செய்து கொண்டே இருந்தேன். லேசாக - மிக லேசாக இதயம் இயக்கத்தைத் தொடங்கிற்று!

"ஆக்ஸிஜன் ப்ளீஸ்!" வெற்றியின் வெறிக் கூச்சல் என் வாயிலிருந்து தெறித்தது. அந்த இயக்கம் - எனது கைகளால் பிசையப்பட்டு மார்பில் இருந்து தொடங்கிய இயக்கம் மெள்ள - மெள்ள - மந்தகதியில் - ஆஹா! மரணம் அவரைத் தனது பிடியிலிருந்து நழுவ விட்டது. எனது கைகள் மரத்துப் போயின. அவர் இதயம் தனது வேலையைத் துவக்கி விட்டது.

பின்னால் அசைவு. திரும்பிப் பார்த்தேன். அவர் மனைவி!

பயத்தில் உறைந்து நின்றிருந்தாள்!

"என்னை உடனே வரச் சொன்னாங்க" - குரலில் அழுகை தெரிந்தது. நான் பதில் சொல்வதற்குள் -

"சொர்ணம்!" அடைக்கலம் பேசினார்.

சொர்ணம் அவரருகே நெருங்கி, சைகையாலேயே அவரை அமைதியாக இருக்கச் சொன்னாள்.

அடைக்கலம் மிகவும் பிரயாசையோடு பேசினார்.

"நாந்தான் வரச் சொன்னேன், சொர்ணம். நா ஒங்கிட்டே சொல்லிக்காம போயிடக் கூடாதுன்னுதான்."

அவளால் பேச முடியவில்லை. உதட்டைக் கடித்து - துக்கத்தை, வெடித்து வந்த அழுகையை அடக்கிக் கொண்டாள்!

"நா சாவப் பயப்படலே. எனக்கு நம்பிக்கை இருக்கு. நாம அடுத்த ஜென்மத்திலே மறுபடி சேர்ந்துருவோமின்னு." - வார்த்தைகளை நிறுத்தி நிறுத்திப் பேசினார். பிறகு, சோகையாய்ச் சிரித்தபடியே கண்களை மூடிக் கொண்டார்.

என்னை அசதி ஆட்கொண்டது. கூடவே மகிழ்ச்சியும். அவரது நாடித் துடிப்பையும் இதயத்தையும் ஒவ்வொரு பதினைந்து நிமிடங்களுக்கும் சோதிக்கச் சொல்லி விட்டு எனது அறைக்குத் திரும்பினேன். ஐந்து நிமிடங்களில் 'டெலிபோன்' ஒலித்தது. "டாக்டர், அடைக்கலம் - அதான் ஆறாம் நம்பர் பெட் பேஷண்ட்..." வாக்கியம் முற்றுப் பெறவில்லை. புரிந்து கொண்டேன்.

அவர் 'வார்டு'க்கு விரைந்தேன். உயிர்ப் பறவை கூட்டை விட்டுப் பறந்திருந்தது. மரணம் - கடைசியாக அவரை ஜெயித்து விட்டது! அப்படியானால்? - அப்படியானால் சாவு அவரைச் சில நிமிடங்களுக்கு விட்டு வைத்தது எதற்காக? அவர் உடலில் ஏற்பட்ட வேதியல் மாற்றங்களாலா? சில நிமிடங்கள் - வெகு சில நிமிடக்கூடுதல் 'வாழ்வு' அவருக்கு எப்படிக் கிடைத்தது? 'வாழ வேண்டும்' என்ற உந்துதல் அவரை, அந்தச் சில நிமிடங்கள் வாழ வைத்ததா? சாவுக்குப் பயணப்பட்ட அவரை, மறுபடி, உலகுக்கு இழுத்து வந்தது எந்த சக்தி? இந்தச் சக்தியின் மூலம் எது? - அமானுஷ்யமா? மனித அறிவுக்கு எட்டாத ஒன்றா? அவரை இயக்கியது எது? தன் மனைவியிடம் விடைபெற்றுக் கொள்வதற்காக அனுப்பப்பட்டாரா? அல்லது.. அல்லது..

என் மருத்துவ அறிவின் எல்லைகள் இவ்வளவுதான் என்று எனக்கு உணர்த்த நடந்த நிகழ்வா?

விடையைத் தேடிக் கொண்டிருக்கிறேன்.

# 10 மாண்புமிகு

'சென்னை செய்தி'யைத் தவிர மற்ற செய்தித்தாள்கள் பல அன்று காலை ஒரு பரபரப்பான செய்தியை வெளியிட்டிருந்தன.

"டாக்டர் பிரபு செய்த ஆராய்ச்சி மூலம் விவசாயிகளுக்கு வருமானம் கூடும்; பூச்சிக் கொல்லி மருந்தைப் பயன்படுத்தி எலித் தொல்லையை ஒழிக்கும் முறையை பிரபு அரசுக்குக் காட்டினார். அமைச்சர் ரங்கதுரை தான் இந்த ஆராய்ச்சியை பலமாக ஆதரித்து தமிழக விவசாய பெருங்குடிகளுக்கு பேருதவி செய்தார்..."

ரங்கதுரை எப்படி டாக்டர் பிரபுவுடன் சேர்ந்து, திட்டமிட்டு உழைத்தார் என்பதைப் பற்றியெல்லாம் விவரங்கள் எழுதப்பட்டிருந்தன. பாலுவைப் பற்றியோ, சாலமனைப் பற்றியோ ஒரு வரி கூட இல்லை. பூச்சிக் கொல்லி மருந்தை நெல், சோளம் மற்ற தானியங்களைக் கொட்டி வைத்துள்ள பெரிய பெரிய கோடவுன்களில் பயன்படுத்தி எலிப்பெருக்கம் குறைக்கப்பட்டதாம். அதனால் எலித் தொல்லை குறைந்து, தானிய சேதம் குறைக்கப்பட்டது. விவசாயிகளுக்கும் வியாபாரிகளுக்கும் பண நஷ்டம் குறைந்தது. இதுதான் செய்தியின் சுருக்கம்.

சேது இதை மீண்டும் மீண்டும் படித்தான். நீலா சொன்னதற்கும் சேது செய்தித்தாளில் படித்ததற்கும் அதிகத் தொடர்பு இருப்பதாகத் தெரியவில்லை.

"நீலா, இந்தச் செய்தி ரொம்பப் பொதுவாக இருக்கிறதே" என்றான்.

"ரங்கதுரை, டாக்டர் பிரபுவை தன்னுடைய கவசமாகப் பயன்படுத்துகிறாரோன்னு தோணுது." நீலா குறிப்பாகச் சொன்னாள்.

"அப்படின்னா, எலிப்பெருக்கம் குறைப்பதெல்லாம் 'பப்ளிக்' நம்புவதற்காக என்கிறாய்... பூச்சிக்கொல்லியை பயன்படுத்துவது வேறொரு காரணத்துக்காக என்கிறாய்."

"பூச்சிக்கொல்லியான 'மேலதயான்' கிராமங்களுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது... அங்குள்ள மக்களுக்கு எப்படியோ அந்த மருந்து கொடுக்கப்படுகிறது. ஆண்களின் உயிரணுக்கள் சிதைக்கப்படுகின்றன. மணமான பெண்கள் கருத்தரிக்கும் வாய்ப்பு வெகுவாகக் குறைக்கப்படுகிறது..." நீலா நிறுத்தி விட்டு சேதுவைப் பார்த்தாள்.

சேது உட்கார்ந்து விட்டான். அவனால் நம்பவே முடியவில்லை. நீலா தொடர்ந்தாள் :

"கிராமங்களில் மக்கள் தொகையைக் குறைப்பதற்கு இது விஞ்ஞானம் அளித்த புது வழியாக ரங்கதுரை எடுத்துக் கொள்கிறார். மத்திய அரசும், தமிழக அரசும் கோடிக்கணக்கில் பணம் செலவழித்து, குடும்பக் கட்டுப்பாடு திட்டங்களைக் கிராமங்களுக்குக் கொண்டு வரப் பார்த்தும் இன்று இந்தியாவின் மக்கள் தொகை என்ன ஆயிற்று, சேது?"

"எண்பது கோடியை எப்போதோ தாண்டி விட்டது."

"இனியும் மக்கள் தொகை பெருகினால் நாடு என்ன ஆகும்? மக்கள் தொகையை எப்படிக் கட்டுப்படுத்துவது? ரங்கதுரையின் அரசியல் திட்டத்தில் பிரபுவுக்கும், பிரபு ஆராய்ச்சி செய்து வரும் 'மேலதயான்' பூச்சிக்கொல்லிக்கும் முக்கிய பங்குகள்... ரங்கதுரைக்கு இது மகத்தான அரசியல் வெற்றி..."

"ஆனால் விஞ்ஞானத்துக்குத் தோல்வி. அரசியலில் சிலருக்குப் பெயரும் புகழும் வருவதற்கு டாக்டர் பிரபு போன்றவர்களும் ஆராய்ச்சி மூலம் உதவுகிறார்கள் என்றால் அதைவிட விஞ்ஞானத்துக்குப் பெருங்கேடு வேறில்லை." சேது கூட உணர்ச்சிவசப்பட்டுப் பேசினான்.

"உண்மையிலேயே டாக்டர் பிரபு இதற்கு உதவி செய்திருப்பார் என்று நம்ப முடியவில்லை." நீலா சந்தேகத்துடன் சொன்னாள்.

"நீ சொல்வதைப் பார்த்தால் ரங்கதுரை சில கிராமங்களில் மக்களை வைத்துப் பரிசோதனை செய்து வருகிறார் என்கிறாய்... அந்த கிராமங்களுக்கு 'மேலதயான்' மூட்டைகள் போயிருக்கின்றன.... எனக்கு எந்தெந்த கடைகள், எந்தெந்த கிராமங்கள் என்பதை இன்று காலையே விவரம் கண்டுகொள்ள முடியும்" என்று ஆபீசுக்கு புறப்பட்டான்.

ரங்கதுரையின் வீட்டுக்கு அவசரமாக வந்தார் பிரபு.

"என்னங்க மிஸ்டர் ரங்கதுரை... நீங்க விஞ்ஞான உலகத்துக்கே கெட்ட பேர் வாங் கித் தரப் பாக்கறீங்களா? அப்பாவி கிராமத்து மக்களை பூச்சிக்கொல்லிக்கு இரையாக்கி, அவர்களுடைய குடும்ப வாழ்க்கையில் குழந்தை இல்லாம செய்யறீங்களே." பிரபு குற்றம்சாட்டினார்.

"டாக்டர் பிரபு... நீங்க ஓர் விஞ்ஞானி... விஞ்ஞானத்திலே எதையும் சரியான அத் தாட்சி இல்லாம 'ஸ்டேட்மெண்ட்' விட மாட்டாங்க... நீங்க என்னைப் பற்றிச் சொல் றதுக்கு உங்களிடம் எந்தவித சாட்சியோ, அத்தாட்சியோ இருக்கிறதா?" ரங்கதுரை தன் னைக் கட்டுப்படுத்திக் கொண்டு பேசினார்.

"ஏன் இல்லை? என்னிடம் 'மேலதயான்' பற்றிய விவரங்கள் அனைத்தையும் வாங்கிக் கொண்டீர்களே அது போதாதா?" பிரபு சீறி னார்.

"அது எதற்காக வாங்கிக் கொண்டேன்? கிராமத்தில் தானியங்களை எலிகள் சாப் பிட்டு லட்சக்கணக்கில் நஷ்டம்... விவசாய அமைச்சருக்கு இதில் பொறுப்பு ஏற்க வேண் டிய நிலை... எலிகளை ஒழிக்க 'மேலதயான்' பூச்சிக்கொல்லி பயன்படும் என்று தோன்றி யது. உங்கள் ஆராய்ச்சியைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று நினைத்தேன்." ரங்க துரை தன் பக்கத்தைப் பதற்றமில்லாமல் சொன்னார்.

"கிராமத்து மக்களுக்கு நீங்கள் 'மேல தயான்' உணவில் கொடுத்து அவர்களுக் குத் தெரியாமலேயே ஒரு புதுவித குடும்பக் கட்டுப்பாடு முறையை புகுத்தி யிருக்கிறீர் களே." - பிரபு விடுவதாயில்லை.

"டாக்டர் பிரபு... நான் என்ன திட்டம் போட்டேன் அதை எப்படிச் செயல்படுத்தப் போகிறேன் என்பதை நான் என்றுமே உங்களிடம் பேசியதில்லை... நினைவிருக்கட் டும்" கடுமையாக எச்சரித்தார் ரங்கதுரை.

சில விநாடிகள் ரங்கதுரையையே பார்த்துக் கொண்டிருந்த பிரபு, "என்னிடம் பேசியதில்லை... உண்மைதான். டாக்டர்கள் பாலு, சாலமன் இருவரையும் கேட்டால் தெரிந்து விடுகிறது" என்றார்.

ரங்கதுரையின் முகம் சட்டென மாறி யது. தன் மேல் துண்டால் முகத்தைத் துடைத்துக் கொண்டார்.

"தேவையில்லாமல் உங்கள் உதவி ஆராய்ச்சியாளர் மேலும் நீங்கள் பழிபோடு கிறீர்கள்." ரங்கதுரை பிரபுவின் மேல் குற்றம் சாட்டினார்.

"பழி யார் மேல் என்று இன்னும் சில நாட்களில் வரப்போகும் திருபர் நீலாவின் கட்டுரையில் தெரியும்" என்று சொல்லி விட்டு பிரபு புறப்பட்டார்.

பிரபு போனதும் ரங்க துரை பலத்த யோச னையில் ஆழ்ந் தார்.



பிரபு செய்தித்தாள்களைக் கூப்பிடுமுன் தன்னுடைய செய்தி வந்து விட வேண்டும். 'மேலதயான்' மருந்தைப் பயன்படுத்தியது மக்கள் தொகை குறைக்க என்பதை பிரபு நிரூபித்து விடக் கூடாது.

செய்தித்தாள்களுக்கு அன்றிரவே பரபரப்பான 'விவசாயச் செய்தி' ஒன்று அனுப்பினார். அமைச்சரே செய்தி அனுப்பினால் அதை வெளியிட எந்தச் செய்தித்தாள்தான் மறுக்கும்?

ரங்கதுரை மற்றும் இரண்டு வேலைகளை உடனடியாகச் செய்தார். ஒன்று நீலா 'சென்னை செய்தி'க்கு எழுதும் கட்டுரையில் ரங்கதுரை பற்றி என்ன சொல்கிறாள் என்பதை அவர் தெரிந்து கொண்டாக வேண்டும். இரண்டு, பாலு-சாலமன் இருவரையும் (அ)தட்டி வைக்க வேண்டும். இரண்டிற்கான ஏற்பாடுகளில் முனைந்தார்.

எந்தெந்த கிராமங்களில் எந்தெந்த கடைகள் 'மேலதயான்' வாங்கினார்கள் என்ற விவரத்தை ஆபீசிலிருந்து எடுத்து வர சேது போய் அரைமணியில் நீலாவும் வேலைக்குப் புறப்பட்டாள். நேராக ஆபீசுக்குப் போய் ஆசிரியர் செங்கோடனிடம் பேச வேண்டும். அவரிடம் தான் இது வரை தெரிந்து கொண்ட விவரங்களைச் சொல்லி கட்டுரையை மறுநாளே வெளியிட வேண்டும்.

அவள் ஏறின ஆட்டோ மயிலாப்பூர் குளக்கரையைத் தாண்டிய போது, இன்னொரு ஆட்டோவும் அவளைப் பின் தொடர்ந்தது. அதில் செங்கோடன் அனுப்பிய ஆள் இருந்தான்! நீலா எதையும் கவனிக்காமல் செங்கோடனிடம் சொல்ல வேண்டியவற்றை மனத்தில் வரிசைப்படுத்திக் கொண்டே போனாள்.

மயிலாப்பூர் தாண்டி டாக்டர் இராதா கிருஷ்ணன் சாலையில் இடதுபுறம் ஆட்டோக்கள் திரும்பின. அண்ணாசாலைக்குப் போகும் வழியில் குறுக்குச் சந்தில் திரும்பிய நீலாவின் ஆட்டோ நிறுத்தப்பட்டது. ஆட்டோ ஓட்டுபவர் நீலாவை இறங்கச் சொன்னார். 'ரிப்பேர்' என்றார்.

"என்னப்பா, இது? அவசரமாகப் போகணும்னு சொன்னேன்... இங்கே கொண்டு வந்து நிறுத்திட்டியே."

நீலாவைத் தொடர்ந்து வந்த ஆட்டோ சந்தின் முன்பகுதியிலேயே நின்று விட்டது. அதிலிருந்து வாட்டசாட்டமான ஓர் ஆள் இறங்கி வந்தான். அவன் நீலாவை நோக்கித்தான் நடந்தான் என்பதை நீலா கவனித்த போது பயம் அவள் இதயத்தைக் கவ்வியது. சந்திலிருந்து ஓடி விடலாமா என்று நீலா திரும்பிய போது, பக்கத்திலிருந்த இன்னொரு சந்திலிருந்து இரண்டு ஆட்கள் வெளியே வந்தனர். ஒருவன் முகத்தில் குறும்புச் சிரிப்பு. இன்னொருவன் பயங்கரச் சிரிப்பை உதிர்த்தான்.

இந்த மூன்று தடியன்களிடமிருந்து எப்படித் தப்புவது? நீலாவுக்குக் கால்கள் நடுங்கின. உறைந்து போய் நின்றாள். அடுத்த சில நிமிடங்களில் சினிமாவில் பார்ப்பது போல் காரியங்கள் நடந்தன.

தனியாக வந்த ஆள் வேகமாக ஓடி வந்தான். இரண்டு பேராக வந்தவர்களில் ஒருவன் கத்தியை உருவினான். தனியாக வந்தவன் அந்த இரண்டு பேர்களையும் தாறுமாறாக அடிக்க ஆரம்பித்தான். கத்தி பிடித்தவனின் கையை முறுக்கிக் கத்தியை நழுவி விடச் செய்தான்.

ஐந்து ஆறு நிமிடங்கள் சண்டை வளர்ந்தது. நீலாவின் மேல் பாய வந்த இரண்டு பேரில் ஒருவன் அங்கு நிறுத்தப்பட்ட ஆட்டோவில் மோதிக் கொண்டதும் அவனுக்கு நெற்றியில் பலத்த காயம் பட்டு, இரத்தம் பீறிட்டது. காயத்தைக் கையால் பொத்திக் கொண்டு அவன் ஓட ஆரம்பித்தான். இன்னொருவனும் இன்னும் சில அடிகளை வாங்கிக் கொண்டு விந்தி விந்தி ஓடினான்.

"வாங்க போவலாம்" என்று தான் வந்த ஆட்டோவுக்கு சைகை காட்டினான் நீலாவுக்கு உதவிக்கு வந்த ஆள்.

"நீங்க யார்?" என்று சற்று நடுங்கிய குரலில் கேட்டாள் நீலா.

"சென்னை செய்தி ஆபீசுக்குப் போகும் போது தெரியும். வண்டியில் ஏறுங்கம்மா" என்றான்.

அவனிடம் மேலே பேசுவது கடினம் என்று தெரிந்து கொண்டு ஆட்டோவில் ஏறி அவன் பக்கத்தில் உட்கார்ந்தாள். அவனுக்கும் இடது கையில் கொஞ்சம் இரத்தம் வழிந்தது. அதை ஒரு கைக்குட்டையால் துடைத்துக் கொண்டு, துணியை காயத்தின் மேல் கட்டினான்.

"என்னால உங்களுக்குக் கஷ்டம்" என்றாள்.

# MULTIPLE
## FINANCE AND INVESTMENTS

### ஃபிக்சட் டெபாசிட்

| குறைந்தபட்ச தொகை | காலம் | வட்டி விகிதம் (ஆண்டிற்கு) | ஊக்கத்தொகை |
|---|---|---|---|
| ரூ. 10,000/- | ஓர் ஆண்டு | 24% | 6% |

### க்யூமுலேடிவ் டெபாசிட்

| குறைந்தபட்ச தொகை | காலம் | முதிர்வுத் தொகை | பரிசு |
|---|---|---|---|
| ரூ. 10,000/- | 33 மாதங்கள் | ரூ. 20,000/- | 1 கிராம் தங்க காசு |
| ரூ. 25,000/- | 60 மாதங்கள் | ரூ.1,00,000/- | 2 கிராம் தங்க காசு |

வட்டியானது பின் தேதியிட்ட காசோலைகளாக வழங்கப்படும்.

முதிர்வுத் தொகை பின் தேதியிட்ட காசோலையாக வழங்கப்படும்.

**MULTIPLE FINANCE AND INVESTMENTS**

H.O. : F2, இரண்டாவது மாடி, ஸ்வாதி காம்ப்ளக்ஸ், 34, வெங்கட்நாராயணா சாலை, (நந்தனம் டிராபிக் சிக்னல் அருகில்) சென்னை - 600 035. ☎ (044) 455130

கிளை அலுவலகங்கள்

10, இரண்டாவது மாடி, S.V.V. காம்ப்ளக்ஸ், (சிப்பி தியேட்டர் எதிரில்) No.9, சாஸ்திரி சாலை, தில்லை நகர், திருச்சி - 620 017. ☎ (0431) 33076

5/13, ராகவன் தெரு, முதல் மாடி, கௌரி தியேட்டர் எதிரில், சுவர்ணபுரி, சேலம் - 636 004. ☎ (0427) 448683

15, மூன்றாவது மாடி, 52 தமிழ் சங்கம் ரோடு, (தமிழ் சங்கம் அருகில்) மதுரை - 625 001 ☎ (0452) 38341.

180, வைசால் தெரு, இரண்டாவது மாடி, (அண்ணா சாலை பிரிவு) பாண்டிச்சேரி - 605 001. ☎ (0413) 39960.



அடக்கமாக அழகாக ஒரு ஃபிளாட் வேணுமே!



சொந்த வீடு வேணும்னு ஆசைதான். ஆனால், மொத்த பணமும் கொடுக்க முடியாதே...



எங்க குடும்பம் பெரிசு... கொஞ்சம் பெரிய ஃபிளாட்டா வேணுமே...?



ஃபிளாட்தான் என்றாலும் அழகாக இருக்க வேண்டாமா?



நேரத்தோட எந்த பில்டர்ஸ் முடித்துத் தராங்க......?



தரமான கட்டமைப்புன்னு நம்பி வாங்க முடியுமா?

உங்கள் அனைத்து கேள்விகளுக்கும் ஒரே விடை : எஸ்டி அசோசியேடட் பில்டர்ஸ். சென்னை நகரில் டீலக்ஸ் ஃப்ளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க முன்னணி நிறுவனங்கள் மூலம் கடன் வசதி பெற, சுலபத் தவணைகளில் வீடு வாங்க, மேலும் விவரங்கள் அறிய தொடர்பு கொள்ளுங்கள்.




**YESDE ASSOCIATED BUILDERS LIMITED**

2nd Floor, 26,
Ranganathan St.,
T.Nagar,
Madras - 600 017.
INDIA
Ph: Off: 4340224/
4340210.
Res.: 2345244
Fax: (044) 2344333

"இதைவிட மோசமா தாக்கப்படவும் தயாரா இருந்தேன்" என்றான் அவன்.

"என்னை யார் தாக்க வந்தாங்கன்னு உங்களுக்குத் தெரியுமா?" நீலா ஆர்வமாகக் கேட்டாள். அவளுக்குப் பயம் தெளிந்தது. ஆட்டோ சரியான வழியில் ஆபீசுக்குப் போய்க் கொண்டிருந்ததால் அந்த ஆள் மேல் நம்பிக்கை பிறந்தது.

"உங்களைத் தாக்க மட்டுமில்லே, தூக்கிட்டுப் போகவும் அந்த தடிப்பசங்க வந்தாஹுங்க" என்றான் அவன்.

"யார் அவங்களை அனுப்பினாங்க?"

"செங்கோடனைக் கேட்டா சொல்வாரு."

"யாரு? செங்கோடனா என்னை..."

"ஆமாம்.. செங்கோடன்தான் உங்களைக் கவனமாப் பாத்துக்கச் சொல்லி என்னை அனுப்பினார்.. ரொம்ப நாளாவே நான் உங்களைத் தொடர்ந்து வருகிறேன்" என்று சிரித்தான் அந்த ஆள்.

"என்ன ராஜா இது? இப்படி இரத்தக் கட்டோடு வந்து நிக்கறியே? கவனமாய் இருக்கக் கூடாதா?" என்று செங்கோடன் அவனை விசாரித்தார்.

"ஒரு சின்ன கத்திக்குத்து.... அவ்வளவுதான்... அந்தப் பசங்களைத் துவைச்சு அனுப்பிட்டேன் சார்" என்றான் பெருமிதத்துடன் ராஜா என்ற அந்த ஆள்.

"இவரை அனுப்பி என் உயிரைக் காப்பாத்திட்டீங்க சார்... நான் எப்படி நன்றி சொல்றது உங்களுக்கு?" நீலா உட்கார்ந்து கொண்டாள். கைக்குட்டையால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"நீலா.. என்னுடைய ஆபீசுலே நீ வேலைக்குச் சேர்ந்த நாளிலேருந்து உன்னுடைய நல்ல எதிர்காலத்துலே நிறைய நம்பிக்கை வச்சிருக்கேன்.... உனக்கு என்னால என்ன செய்ய முடியுமோ அவ்வளவும் செய்வேன்" என்று செங்கோடன் சொன்னார்.

"அப்ப நான் வரேன் சார். எப்ப வேணுமானாலும் கூப்பிடுங்க." ராஜா புறப்பட்டான்.

"ராஜா நேரா நம்ம டாக்டர்கிட்டே போய் அதுக்கு ஒரு 'ட்ரீட்மெண்ட்' எடுத்துக்க" என்று ராஜாவை அவர் அனுப்பி வைத்தார்.

அவர்கள் பேசிக் கொண்ட தோரணையைப் பார்த்தால் ராஜாவை செங்கோடன் பலமுறை இதுபோன்ற காரியங்களுக்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார் என்பது போல் தோன்றியது.

"பத்திரிகை உலகம் விசித்திரமானது... இதிலே நியாயமானவங்க அதிக நாள் தங்



"பொண்ணு பார்க்க வந்த இடத்துல மாப்பிள்ளை நாற்காலியில உட்கார்ந்துட்டே தூங்கறது நல்லாவா இருக்கு?"

"புரியாம பேசறீங்களே...! கவர்மெண்ட் ஆபீஸ்லதான் மாப்பிள்ளை வேலை செய்யறாருன்னு பொண்ணு வீட்டுக்காரங்க நம்ப வேணாமா?"

— எஸ். எஸ். பூங்கதிர்

கணும்னா சில எதிர்ப்புகளை எப்படி சமாளிக்கிறதுன்னு தெரியணும்" என்று சிரித்தார் செங்கோடன். தொடர்ந்து, "நீலா உன்னைத் தாக்க வந்தவங்களை யார் அனுப்பினாங்கன்னு மூர்த்தியைக் கேளு சொல்வான்" என்று அவன் வாயைக் கிளறினார்.

"அமைச்சர் ரங்கதுரையாகத்தான் இருக்கும்" என்றான் மூர்த்தி தீர்மானமாக.

செங்கோடன் தலையை ஆட்டி ஆமோதித்தார். "மூர்த்தி.. நீ கூட 'ரிப்போர்ட்டர்' ஆக வழியிருக்கு" என்று அவனைப் பாராட்டினார்.

"எல்லாமே புரிஞ்சிடுச்சி" என்றாள் நீலா.

"நேற்றும் இதையேதான் சொன்னே... இப்பவும் சொல்றே! என்ன புரிஞ்சுது?" என்றான் மூர்த்தி.

"டாக்டர் பிரபுவிடம் 'மேலதயான்' ஆராய்ச்சிக் குறிப்புகளை வாங்கிக் கொண்டு எலிப்பெருக்கத்தை ஒழிப்பதாய் வெளியே நாடகம் போட்டார் ரங்கதுரை. உண்மையிலேயே 'மேலதயான்' மருந்தை குடும்பக் கட்டுப்பாட்டுக்குப் பயன்படுத்துகிறார். எந்தெந்த கிராமத்தில் மக்கள் இந்தக் கொடுமையான பரிசோதனைக்கு இரையானார்கள் என்று இன்னும் கொஞ்ச நேரத்தில் தெரியும்..." நீலா திட்டவட்டமாகச் சொன்னாள்.

"சபாஷ் நீலா... நான் நினைச்சதையே நீயும் சரியா சொல்லிட்டே.... ஆனால் ஒரே ஒரு சிக்கல்தான்," செங்கோடன் தூண்டினார்.

"தெரியும், சார்... ரங்கதுரையின் பரிசோதனைக்குட்பட்ட கிராமம் ஒன்றில் போய் இதற்கான அத்தாட்சியைக் கொண்டு வர்றவரைக்கும் ரங்கதுரையை நாம அசைக்க முடியாது.. அதைத்தானே சொல்றீங்க?" என்றாள் நீலா.

(தொடரும்)

# ஏ வகுப்புக் கைதியும் என்றைக் கைதியும்

ஆயுள் தண்டனைக் கைதி சார்லஸ் ஷோப்ராஜ் டெல்லி திஹார் ஜெயிலில் இருக்கிறார். 'ஐ.ஜி. சிறைப்பிரிவு' என்ற தகுதியில் அந்த சிறைச்சாலையில் புரட்சிகரமான சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தார் கிரண்பேடி. அப்போது அவர் சார்லஸ் ஷோப்ராஜுக்குப் பல சௌகரியங்கள் (டீ.வி, ஏர்கூலர், எலக்ட்ரானிக் டைப்ரைட்டர்...) செய்து கொடுத்தார். இதனால் பெரிய சர்ச்சை கிளம்பியது. பேடி பணிமாற்றம் செய்யப்பட்டுள்ளார்.

இந்த சர்ச்சை ஒரு பக்கம் இருக்க, சிறைச்சாலைகளில் கைதிகளை 'ஏ', 'பி' என்று வகுப்புப் பிரித்து வைப்பது வழக்கமாகவே உள்ளது. 'ஏ' பிரிவு கைதிகளுக்குச் சலுகைகள் நிறைய உண்டு. 'சட்டத்தின் முன் எல்லோரும் சமம்' என்னும் போது இப்படிப்பட்ட ஏற்றத்தாழ்வுகள் இருப்பதை நாம் அனுமதிக்கலாமா?

வழக்கறிஞர் பி.வி. பக்தவத்சலம் நமது கேள்விக்குப் பதில் சொல்கிறார் :



• ஷோப்ராஜ்

"இந்த ஏற்றத்தாழ்வு பிரிட்டிஷார் காலத்தில் அறிமுகமானது. சிறைச்சாலைகளை அவர்கள் வெறும் தண்டனைக் கூடங்களாக எண்ணவில்லை. குற்றம் செய்தவர்களைத் திருத்தி நல்வழிப்படுத்தும் மையங்களாக நினைத்தார்கள்.

"சிறைக் கைதிகள் இரு பிரிவினராகப் பிரிக்கப்பட்டனர். சமுதாயத்தில் அந்தஸ்து பெற்றவர்கள் ஏ பிரிவிலும் மற்றவர்கள் பி பிரிவிலும் வைக்கப்பட்டனர்.

"ஏ வகுப்புக் கைதியின் அறையில் மேஜை, நாற்காலி, கட்டில்.... கொசுவலை கூட இருக்கும். அவர் விரும்பும் செய்தித்தாளை வாங்கித் தருவார்கள். துணி தோய்த்துப் போட 'ஆர்டர்லி' உண்டு. இவர்கள் விரும்பும் உடையை அணியலாம். இப்போதெல்லாம் ஏ பிரிவுக் கைதிகள் டீ.வி. வீடியோ டெக் கூட வைத்துக் கொண்டு பார்க்கலாம்!

" 'பி' வகுப்புக் கைதியானால் இந்தச் சலுகைகள் எதுவும் கிடையாது. காலையில் கஞ்சி, மதியம் பட்டை சாதம், சாம்பார் மோர் - இப்படித் தருவார்கள். அரசாங்கம் இத்தகைய ஒரு கைதிக்கு நாளொன்றுக்குப் பதினேழு ரூபாய்தான் செலவு செய்யும்.

"இதுவே 'ஏ' பிரிவு கைதிக்கு அரசு முப்பத்து நான்கு ரூபாய் செலவு செய்கிறது! காலை எழுந்ததும் அவர்களுக்குக் காப்பி உண்டு. மதியம் அவர்கள் விருப்பப்படி சைவ அல்லது அசைவ உணவு. சைவம் எனில் சுவீட், தயிர் உண்டு!



• பக்தவத்சலம்

"இது தவிர, தாங்கள் விரும்பும் தொகையை ஜெயில் நிர்வாகியிடம் ஒப்படைத்து விட்டு, அவ்வப்போது தேவைக்கேற்ப பொருள்களை வாங்கி, அனுபவிக்கும் உரிமையும் 'ஏ' பிரிவினருக்கு உண்டு. இந்தச் சலுகை 'பி' பிரிவினருக்கு இருந்தாலும் அவர்கள் செலவழிக்கக்கூடிய தொகைக்கு வரம்பு உண்டு.

"சமுதாயத்தில் படித்து, வசதி -




"இப்போது ஒரு கைதியை எந்தப் பிரிவில் வைப்பது என்பது குறித்து, கோர்ட் உத்தரவின் பேரில், ஜெயிலில் இருக்கும் ஒரு கமிட்டிதான் முடிவு செய்கிறது. இரண்டாம் வகுப்புக் கைதி, முதல் வகுப்புச் சலுகை கோரி அரசுக்கு விண்ணப்பிக்கலாம்...." என்று கூறிய பக்தவத்சலத்திடம் "முதல் வகுப்புக் கைதி சலுகைகளை மறுத்து இரண்டாம் வகுப்பில் இருக்க முடியுமா?" என்று கேட்டோம்.

"ஓ எஸ்!" என்றார் பக்தவத்சலம். "ஒரு போராட்டத்தின் போது நானும் சில நண்பர்களும் கைதானோம். அப்போது எங்களை 'ஏ' பிரிவு சிறையில் வைக்க முற்பட்டார்கள். 'நாங்கள் எல்லோருமே பொது நோக்குடன் தான் போராடுகிறோம்' என்று சொல்லி அந்தச் சலுகையை மறுத்து விட்டோம்...." என்றார்.

அந்தஸ்துடன் வாழ்பவர்கள் சிறைக்கு வந்து அந்த வசதியை இழக்க நேரிடும்போது அது அவர்களை உடல், மனரீதியாக பாதிக்கும். அதனால் அவர்கள் மனம் திருந்துவது தாமதப்படும் என்று அந்தக் காலத்தில் எண்ணினார்கள். பிரிட்டிஷ் காலத்தில் ஆரம்பித்த மரபு இன்றும் தொடர்கிறது.

ஆங்கிலேயர் பிடியிலிருந்து விடுபட்டு வந்த பெரும்பாலான நாடுகளின் சிறைகளில் இன்றைக்கும் இத்தகைய பாரபட்சமான நிலைமை நீடிக்கிறதாம்!

சந்திப்பு : **மௌலி**

---

## மரபு!

ஆட்டோ சங்கருக்கு தூக்குத் தண்டனை நிறைவேற்ற தீர்ப்பு எழுதிய நீதிபதி இப்போது புதிய பேனாவை உபயோகித்துக் கொண்டிருப்பார்! ஆம்! தூக்குத் தண்டனை விதித்துத் தீர்ப்பு எழுதும் பேனாவை தீர்ப்பு எழுதி முடித்தவுடன், அதன் நிப்பை உடைத்து.... பேனாவைக் குப்பையில் போடுவதுதான் வழக்கம். அது ஒரு மரபாக உள்ளது!

— எஸ். பொன்னுசாமி






## சூடு கண்ட புலி

"கங்கை, பிரம்மபுத்ரா, நதிகளின் டெல்டாக்களில் புலிகள் அதிகம் உள்ளன. அங்கே புலிகளை வேட்டையாடக் கூடாது என தடை விதிக்கப்பட்டுள்ளது. ஆனால் அந்தப் புலிகள் மனிதனைக் கொன்று விடுகின்றன. இதனைத் தடுக்க, மனித பொம்மைகளை ஆங்காங்கே கார் பாட்டரியைப் பொருத்தி வைத்திருப்பார்கள். பொம்மையை மனிதன் என நினைத்து, புலிகள் கொல்லவரும் போது 'ஷாக்' அடிக்கிறது. 'ஷாக்' அடிக்கப்பட்ட புலிகள் உண்மையான மனிதர்களின் கிட்டே கூட வருவதில்லை என்கிறார்கள் அதிகாரிகள்.

— தஞ்சை ஆனந்த்

ஆதாரம் : அறிவியல் அதிசயங்கள் நூல்

# அமராவதி பெனிபிட் பண்ட் லிட்.

வழங்கும்

## லைஃப் பென்ஷனர் திட்டம்

**நிம்மதியான ஓய்வு,**






**நிலைத்த பாதுகாப்பு,** **நிரந்தர வருமானம்.**






**2 மடங்காகிறது உங்கள் முதலீடு.**

* ஒரு முழுமையான நிறுவனத்தின் முத்தான திட்டம் * பென்ஷன்தாரர்களுக்கென்று உருவாக்கப்பட்டது * திறமை மிக்க நிர்வாகத்தினரால் நடத்தப்படுவது * எமது இதர திட்டங்கள்: பிக்சட் டெபாசிட், ரெக்கரிங் டெபாசிட், கிருஷ்ணா ரொக்கப் பத்திரம், யமுனா தொடர் வைப்புத் திட்டம், கங்கா மறு முதலீட்டுத் திட்டம்.

Transactions with Members only.



C.N. Venkatasubramanian,
Chairman,
Retd. Asst. General Manager,
United India Insurance Co. Ltd.

# அமராவதி பெனிபிட் பண்ட் லிட்.

(C.I.No.18-29133/94)

CORPORATE OFFICE : 24, CONRAN SMITH ROAD, GOPALAPURAM, MADRAS - 600 086. PHONE : 825 2716.

**H.O. :** அக்ரஹாரம் கொழுமம், உடுமலைப்பேட்டை (Tk) கோவை (Dt.)

**B.O. :** பிளாட் நெ.2, நெ.10, வேளச்சேரி மெயின் ரோடு, சேலையூர், சென்னை-73. போன் : 235 7415.

பழனி ரோடு, நெய்க்காரப்பட்டி, திண்டுக்கல் அண்ணா மாவட்டம்.

1000, மேட்டுப்பாளையம் ரோடு, R.S. புரம், கோயமுத்தூர்.

YOUNG-INDIA

50 கே. பாலசந்தர்

WORK HAS MADE ME WHAT I AM. I NEVER ATE A BIT OF IDLE BREAD IN MY LIFE.
— DANIEL WEBSTER —

# நினைவலைகள்

படப்பிடிப்பின் போது தனிப்பட்ட முறையில் எனக்கு ஒரு உதவியாளன் உண்டு. பெயர் சுகுமார். எனக்கு நாற்காலி போடுவதிலிருந்து, வெயிலில் குடை பிடிப்பதிலிருந்து, சாப்பாடு போடும் வரை எனது தனிமனிதத் தேவைகளுக்காகவே அமர்த்தப்பட்ட பையன்... நீண்ட நெடுநாட்களாக என்னிடம் பணிபுரிகிறான்.

'கல்கி'யில் நான் எழுதி வரும் நினைவலைகளைத் தொடர்ந்து படித்து வருகிறானாம். ஒருநாள் அவுட்டோரில் எனக்குக் குடைபிடித்தபடியே சொன்னான்:

"உங்கள் மனசாட்சியைப் பேச வைத்தீர்கள்; clapஐப் பேச வைத்தீர்கள். கல்கி பத்திரிகைக்காக என்னையும் கொஞ்சம் பேச விடுவீர்களா?" என்று கேட்டான்.

நான் அசந்து போனேன்.

படப்பிடிப்பிற்காக நான் எடுத்துச் செல்லும் எனது பாக்கெட் டேப்ரிகார்டரை அவனிடம் கொடுத்து, "நீ என்னவெல்லாம் சொல்ல வேண்டுமென்று நினைக்கிறாயோ, அதை அப்படியே இந்த டேப்பில் பதிவு செய்து கொண்டு வா... அதை முழுவதும் கேட்டு விட்டு எப்படி உபயோகப்படுத்திக் கொள்ளலாம் என்று பார்க்கிறேன்" என்று சொல்லி அனுப்பி வைத்தேன்.

மறுநாளே 'டேப்' பண்ணிக் கொண்டு வந்தான்.

இனி பேசுவதெல்லாம் சுகுமார்தான். அவன் பாஷையில்; அவன் சொல்கின்ற கருத்துக்களுக்கெல்லாம் நான் பொறுப்பல்ல. அவை ஒரு சாமானியனின் கருத்து.

சுகுமார் சொல்கிறான் :

எங்க டைரக்டர் கே.பி. சாரைப் பத்தி நாலு வார்த்தை சொல்லணும். அவருகிட்ட இருக்கிற சில நல்ல குணம் புதுசா வர்றவங்களுக்குத் தெரியோணும்.

ரொம்ப திட்டுவாருன்னுட்டு அவரைப் பத்தி எல்லாரும் சொல்வாங்க. அதுலே ஒரு சின்ன ரகசியம் இருக்குது. அவர் யாரை ரொம்பத் திட்டறாரோ அவுங்க மேலே ரொம்ப நம்பிக்கை வச்சிருக்காருன்னு அர்த்தம்.

திட்டவே இல்லேன்னா... அவ்ளோதான்; இது பூட்ட கேஸ்; என்ன சொல்லியும் தேறாதுன்னு அர்த்தம். இது புரியாம, "என்னை கே.பி. சார் திட்டினதே இல்லே"ன்னுட்டு பெருமையா சில பேர் சொல்லிட்டுத் திரிவாங்க!

'ஷாட்' சரிக்கட்டா வர்ற வரைக்கும் விட மாட்டாருன்றது எல்லாருக்கும் தெரிஞ்ச விஷயம்தான். நல்லா வந்தா... 'ஓகே... கட்'டுன்னு கத்திடுவாரு... சில சமயம் உதவி டைரக்டரைப் பார்த்து 'என்ன சரியா இருந்துதா'ன்னு கேட்பாரு. உடனே தலையை ஆட்டுவாங்க.

'சும்மா தலையைத் தலையை ஆட்டாதே! இன்னும் கொஞ்சம் நல்லா வரலாம்னா, ஒன்மோர் எடுத்துக்கலாம்' பாரு...

'ஆமாம் ஒன்மோர் எடுத்துக்கலாம்' -பாங்க... 'அதை முதல்லேயே தைரியமா சொல்றத்துக்கென்ன'ன்னு சண்டை பிடிப்பாரு.

எனது comment :

I don't want yes men around me.

I want you to disagree once in a while even if it costs you your job.

இப்படி அடிக்கடி சொல்வாராம் M.G.M. முதலாளி Goldwynn.

Back to Sukumar :

சூட்டிங்கப்போ யாராவது கெஸ்டோ பத்திரிகை ஆளுங்களோ பக்கத்துலே உட்கார்ந்து பேசிக்கிட்டிருக்கிறப்போ நான் டைரக்டருக்கு மட்டும் காப்பி கொண்டு கொடுத்தேன்னா, கடுமையா ஒருமுறை, முறைப்பார் பாருங்க...

"யாராவது பக்கத்துலே இருக்கிறப்போ அவுங்களுக்கும் காப்பியோ, கூல்டிரிங்கோ கொண்டு வராம எனக்கு மட்டும் கொண்டு வரியே, அறிவு கெட்டவனே!"ன்னு அவர் போன அப்பால என்னைத் திட்டுவாரு.

கல்யாண அகதிகள் பட சூட்டிங்கு!

ஒரு பத்திரிகை ஆளு வந்திருந்தான். "நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவங்க கதையா மட்டும் சாஸ்தியா எடுக்கிறீங்களே அது

ஏன்"னு அந்த ஆள் கேட்டான்.

"எனக்குத் தெரிஞ்சதை நான் எடுக்கிறேன். ஏன்னா நானும் நடுத்தர வர்க்கம். நடுத்தரவர்க்கத்திலே இருக்கிற ஒவ்வொரு வீடும் ஒவ்வொரு குடும்பமும் ஒரு கதை ஃபாக்டரி மாதிரி எனக்கு"ன்னாரு...

அந்த ஆளு அதை ரசிச்சு நோட் பண்ணிக்கிட்டான்.

"Bible is my readymade factory" - Cecil B De Mille. இப்படிச் சொல்லியிருக்கிறார் - இது எனது வாசகம்.

அன்னிக்கு ஹாஸ்டல் மாதிரி இருக்கிற பொம்பளைங்க பெட் ரூம்ல ஒரு சீன் எடுத்துகிட்டிருந்தாரு.. அந்த கேர்ல்ஸுங்க எல்லாம் இஷ்டத்துக்கு ஜோக் அடிச்சுக்கிட்டிருக்கும்.

பத்திரிகை ஆளு கொஞ்சம் எடக்கான ஆளு போல இருக்கு. அவன் கேட்டான் :

"பொம்பிளைங்க ஹாஸ்டல்லே என்னல்லாம் நடக்கும், எப்படி யெல்லாம் பேசிக்குவாங்கன்னு உங்களுக்கெப்படி இப்படி சூட்சுமமாத் தெரியுது? பொம்பிளைங்க ஹாஸ்டலுக்கெல்லாம் கூடவே போயி இருந்து பாத்திருக்கீங்களா... அனுபவிச்ச மாதிரி எடுக்கிறீங்களே, அதான் கேட்டேன்"ன்னான் பத்திரிகை ஆளு...

டைரக்டருக்குக் கோபம் வந்துடுச்சு.

"என்னய்யா கேள்வி இது? நீ கேட்கிறதைப் பாத்தா 'தப்புத் தாளங்க' படம் எடுக்கணும்னா வேசி வீட்டுக்குப் போய் அனுபவம் இருக்கிறவன் தான் எடுக்க முடியும்னு சொல்றியா?"

கோபமாகவே கேட்டார்... அந்த பத்திரிகை ஆளு சிரிச்சுக் கிட்டான்.


அப்படி ஒரு பக்தி...


... கண்ணில் படாத இடமா?....


என்னையும் பேச விடுவீங்களா?

அப்புறம் பாருங்க :

அவுட்டோர் போனா சார் கூடவே நானும் இருக்கணும். அதான் என் வேலை. வெய்யிலுக்காக நான் இவருக்குக் குடை புடிக்கணும். அவர் ஒரு இடத்துலே நின்னாத்தானே! அங்கே போவாரு, இங்கே போவாரு. குடையை இவருக்குப் புடிச்சுகிட்டிருக்கமாக்கும்னு நினைச் சுக்கிட்டே சைடிலே பாத்துட்டுத் திரும்பிப் பாத்தா இவர் வேற எங்கேயோ நிப்பாரு.. சில சமயம் நடந்துக்கிட்டே வெயில்ல யோசிப்பாரு! நானும் கூடவே குடையோட நடப்பேன்! ரொம்ப பேஜார்தான். சூட்டிங் சப்போ இவருக்குக் குடை புடிக்கிறது இருக்கே... குழந்தைங்களுக்கு முடி வெட்டற மாதிரி...

ஷாட் வைக்க.. மலைமேலே ஏறுவாரு. என் கையோட ஒரு கையைக் கோத்துக்குவாரு... அவருக்கு நான் புடிமானம். எனக்கு அவர் புடிமானம். தபதபன்னு மலைச்சரிவிலே ஏறுவாரு. கையைக் கோத்துக்கிட்டிருக்கிற துனாலே நானும் அவரோடவே ஓடணும். அவருக்குப் பாதுகாப்பாப் போற நான் சில சமயம் சறுக்கி விழுந்துடுவேன். பார்த்து சிரிச்சுக்கிட்டே கை தூக்கி விடுவாரு.

எங்க யூனிட்லே கோபின்னு ஒரு லைட்பாய். ஸாரோட வொர்க் பண்ணி, 25 வருஷ சர்வீஸ் அவருக்கு. ஸாருக்கும் அவுரை ரொம்பப் புடிக்கும். அவர் சொல்வாரு.

"டேய் சுகுமாரா! நீ டைரக்டர் சாருக்குத் துணை போறாப்ல இல்லே.. அவர்தான் உனக்குத் துணையா வர்ற மாதிரி தோணுது"ம் பாரு!

எத்தினி ஸ்டிரிக்டா இருக்காரோ அந்த அளவுக்கு யூனிட்காரங்க மேலே அன்பா இருப்பாரு. கே.பி. சார் யூனிட்டுன்னு எங்க எல்லாருக் குமே வெளியே எங்கே போனாலும் ஒரு சின்ன மரியாதை உண்டு! யூனிட் காரங்களுக்குப் போடற சாப்பாட்டு விஷயத்துலே கஞ்சத்தனம் பார்க்கக் கூடாதுன்னு புரொடக்ஷன் மானேஜர்கிட்டே அடிக்கடி சொல்வாரு.

எங்கேனாச்சும் வெளியூருக்கு அவுட்டோர் போறப்போ சமையல்காரங் களை அழைச்சுக்கிட்டுப் போய் 'மெஸ்' வச்சு சமைக்க ஏற்பாடு பண்ணு வாங்க. அந்த ஊருக்கு வந்து இறங்கினவுடனே சூட்டிங் நடக்கப் போற

இடத்தைப் பார்க்கிறதுக்கு முன்னாலே மெஸ் நடத்தற இடத்தைத்தான் பாக்க வருவாரு... 'குக்' பண்ற இடம் சுத்தமா, கிளீனா இருக்கணும் அவருக்கு. பதார்த்தம் பண்ணி வச்சிருக்கிற பாத்திரம் ஏதாச்சும் மூடாம இருந்திச்சுன்னா, ஓரத்திலே கிடக்கிற தட்டை எடுத்துக்கிட்டு வந்து அவரே அண்டாவை மூடுவாரு. 'மெஸ்'ஸைப் பாத்துட்டு வந்தப்புறம் யூனிட்காரங்க, சின்னச் சின்ன டெக்னீஷியன் இவுங்களுக்கெல்லாம் தங்கறதுக்கு சரியா வசதி பண்ணிக் குடுத்திருக்காங்களான்னு போய் 'செக்' பண்ணுவாரு.

டைரக்டர் சார், அவரே டைரக்ட் பண்ற படமா இருந்தா, எல்லாத்தையும் அவரே செய்யணும்னு நினைப்பாரு... அவரே காமிரா டிராலி தள்ளுவாரு அப்பல்லாம். இப்பொ உதவியாளருங்க அவரை டிராலி தள்ள விடறதில்லே. அடிக்கடி சொல்வாரு. 'காமிரா டிராலி தள்றது இருக்கே, அதுக்கே ஒரு ஞானம் வேணும்'பாரு. ஏன்னா காமிரா நகர்ந்து போறதிலேயே தாளம் இருக்கு, மியூசிக் இருக்கு, கலைநயம் இருக்கும்பாரு.

எந்த அஜிஸ்டெண்டு நல்லா டிராலி தள்ளக் கத்துக்கிறானோ அவன்தான் நல்ல டைரக்டரா வர முடியும்னு அடிக்கடி சொல்வாரு.

அமீர்ஜான் ஸார் இவர்கிட்டே அஜிஸ்டெண்டா வொர்க் பண்றவரைக்கும் அவர் காமிரா டிராலி தள்ளினாத்தான் இவருக்கு நிம்மதியா இருக்கும். அதே மாதிரிதான் சுரேஷ் கிருஷ்ணா ஸாரும். இவர்கிட்டே வொர்க் பண்ற வரைக்கும் அவர்தான் டிராலி தள்ளுவாரு.

இவர்கிட்டே கொஞ்சம் கூட மாத்துக் குறையாத பக்தியோட இருக்கிறவங்கன்னு சொன்னா ரஜினி சாரையும் விசு சாரையும் தான் சொல்லணும். மத்தவங்கள்ளாம் அப்படி இல்லேன்னு இல்லை; எனக்கு ஏன் வம்பு? பேச்சுக்கு சொன்னேன்.

இவ்வளவு பெரிய சூப்பர் ஸ்டார் ஆனப்புறம் கூட, எங்க சார் இருந்தாருன்னா அவர் கண்லே படாத இடமாப் பாத்துத் தான் ரஜினி சார் சேரைப் போட்டுக்கிட்டு உட்கார்ந்துக்குவாரு.

விசு சார் இருக்காரே..! அவரும் அப்படித் தாங்க... இவர் மேலே அப்படி ஒரு பக்தி... நினைவுக்கு வருது...

'சம்சாரம் மின்சாரம்' படம், தங்க மெடல் வாங்கினதுக்காக உட்லண்ட்ஸ் ஓட்டல்லே ஒரு பெரிய விழா எடுத்தாங்க. மேடையிலே கே.பி. சாரும் இருந்தாரு. விழா முடியற டயம். எல்லாரும் பேசி முடிச்சு கேடயம் எல்லாம் குடுத்து, விசு சார் கடைசியாப் பேசினாரு.

பேசி முடிச்சுட்டு கடைசியா சொன்னாரு - 'ஒரே ஒரு காரியம்... இந்த மேடையிலே நான் செய்ய வேண்டிய ஒரு முக்கியமான காரியம். அதுதான் என் திரையுலக குருநாதருக்கு நான் செய்ய வேண்டிய மரியாதை'ன்னு சொல்லி மேடையிலேயே சார் கால்ல விழுந்து ஆசீர்வாதம் வாங்கிட்டாரு! மேடைக்குக் கீழே நின்னுக்கிட்டிருந்த என் கண்லே கண்ணீர் வந்துருச்சு!

அவராலே எத்தினியோ பேர் வாழ்ந்துகிட்டிருக்கோம்; எத்தினியோ பேரை மேலே ஏத்தி விட்டிருக்காரு; அவராலே ரொம்பப் பேர் பலன் அடைஞ்சிருக்காங்க. பலன் அடைஞ்சவங்கள்ளே ஒருத்தர் ரெண்டு பேர் கே.பி. சார் முதுகிலேயும் குத்தியிருக்காங்க. என்னா பண்றது? அதான் உலகம்.

புரியாதவங்கள்ளாம் நினைப்பாங்க; சினிமாக்காரங்களுக்கு மட்டுமே பணம் ஏதோ செடிலே காக்கிறாப்லயும், கூரையிலேருந்து கொட்றாப்லயும்... எத்தினி டென்சன்... எத்தினி உழைப்பு... ராப்பகல் பார்க்காம... தூக்கம் இல்லாம... வெய்யில், குளிர் பார்க்காம... மழையிலேயும் புயல்லேயும்... அத்தனையும் உழைப்புத்தான்...

சும்மா உட்கார்ந்த இடத்திலே சம்பாதிக்கிறதில்லே. ஒவ்வொரு பைசாவையும் ஓடியாடி உழைச்சுத்தான் சம்பாதிக்கிறாங்க! அதுலேயும் எங்க டைரக்டரைப் பத்திச் சொல்லவே வேணாம்...

எத்தினியோ பேரைப் பத்தி சார் சொல்லியிருக்காரு. எழுதியிருக்காரு. அவரைப் பத்தி நான் ஏதாச்சும் சொல்லணும்னு தோணிச்சு. அதிகப்பிரசங்கித்தனமா இருந்தா மன்னிச்சுடுங்க கே.பி. சார்...

Tail Piece :

குமாரின் குரலை 'டேப்'பில் கேட்டவுடன் கட்டுரையின் ஆரம்பத்தில் சொன்ன quotation தான் உடனே என் கவனத்திற்கு வந்தது...

(தொடரும்)



''புதை பொருள் ஆய்வாளர்கள் நம்ம ஊர்லே தோண்டித் தோண்டிப் பார்த்தாங்களே என்ன கிடைச்சதாம்?''

'' சாராய ஊறல்தான்; வேறென்ன!''

— தஞ்சாவூர் ராஜபாரதி

# அயோத்யா பெனிபிட் பண்ட் லிட்

நம்பிக்கையோடு சேமிக்க நல்ல நிறுவனம் -




வட்டி விகிதம்

**21% வரை**

- பென்ஷன்தாரர் ரிலாக்ஸேஷன் திட்டம்
- ஸ்ரீ ராமஜெயம் டெபாசிட்
- ரகுவம்சம் டெபாசிட்
- டீப் டிஸ்கவுண்ட் டெபாசிட்
- ரொக்கப் பத்திரம்




## அயோத்யா பெனிபிட் பண்ட் லிட்

(மத்திய அரசாங்கத்தின் அங்கீகாரம் பெற்ற 'நிதி' நிறுவனம்)
14/3, ஆர்யா கௌடர் சாலை, மேற்கு மாம்பலம்,
சென்னை-600 033. தொலைபேசி : 428831, 4840029

★ வரவு செலவுகள் பங்குதாரர்களுக்கு மட்டும்

**பழைய குறிக்கோள் - புதிய கொள்கை**

மரங்களை வளர்ப்பீர்.

---

ஸ்ரீராமபிரானுக்குப் பாலம் அமைக்க சின்னஞ்சிறு அணிலும் மண் சுமந்தது.
உங்கள் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பாலம் அமைக்க நாங்களும் உதவ முடியும்

# நடராஜ் ஃபைனான்ஸ்

தஞ்சையில் புதிய கிளை : 2-B செல்வம் நகர், மெடிகல் காலேஜ் ரோடு, ராஜப்பா நகர், தஞ்சை - 613 007

V. ரவி B.A., (கிளை மேலாளர்)

**நடராஜ் குரூப் கம்பெனிகள்**

எஸ். நடராஜன் (செயல் இயக்குநர்)

கிளை திறப்பை முன்னிட்டு தஞ்சையிலும், சென்னையிலும் டெபாஸிட்தாரர்களுக்கு ஒரு கிராம் தங்கக் காசு (22 காரட்) வழங்குவது மேலும் நீடிக்கப்பட்டுள்ளது.

மினிமம் டெபாஸிட் ரூ. 10,000 காலம் 12 மாதங்கள்

**வட்டி 24% P.A. பரிசு 4%+1% பென்ஷனர்**

12 மாதங்கள் 24 மாதங்கள் 36 மாதங்கள் 48 மாதங்கள்

● சீட்டு குரூப்பில் சேர்கிறவர்களுக்கு வெள்ளிக்காசு, மற்றும் பல்வேறு பரிசுகள் ● 36 மாதங்களுக்கு ரூ. 12,000 டெபாஸிட் செய்து 24 மாதங்களில் 3 சவரன் தங்கம் பெறும் திட்டம் ● இரட்டிப்புத் திட்டம் ● பண்ணைவீடு திட்டம் ●

**CALL : 4342098, 4840150**



**NATARAJ FINANCE & INVESTMENTS**
NATARAJ CHITS (TAMILNADU) PVT LTD.,
NATARAJ ESTATES–FARM HOUSE PROMOTERS
"Shanthi Complex", 3rd Floor, 26-Ranganathan St.,
T. Nagar, Madras-600 017. B.O. KANCHEEPURAM-1.



| CHIT & FINANCE | OIL MILLS | EXPORTS | FARM HOUSE | PUBLICATIONS |
|---|---|---|---|---|
|  |   |  |  |  |

# அல்லி நகரிலிருந்து வந்த அறுபது வயது இளைஞர்!



• ரஜினியுடன்

அல்லி நகரம், மதுரை மாவட்டம். குடி தண்ணீர் இல்லாமல் தவித்த ஊர், வண்டி கட்டிக் கொண்டு போய், தண்ணீர் எடுத்து வந்து ஊராருக்கு 'சப்ளை' செய்யும் வேலை பவுனுக்கு. பிழைப்பும் அது தான். புராண, சமூக நாடகங்களில் நடிப்பது பிடித்தமான மற்றொரு வேலை.

அல்லி நகரத்துக்குத் தண்ணீர்த் தொட்டி கட்டி குடிநீர் சப்ளை சீர் செய்யப்பட்டதும் பவுன் வேலையில்லா இளைஞர் ஆனார். மாற்றுத் தொழிலாக 'சினிமாவில் நடிக்க முயன்றால் என்ன?' என்று சென்னைக்கு வந்தார். 'பவுன்' 'பவுன் ராஜ்' ஆனார்.

முதல் படம் 'புதிய வார்ப்புகள்'. ஊர்த் தலைவர் பக்கத்தில் சும்மா கைகட்டி நிற்கும் வேடம். தொடர்ந்து அய்யர் வேடம், தெருவில் நடக்கும் பொதுஜனம், பஞ்சாயத்துக் கூட்டத்தில் தலையாட்டும் நபர் எனப் பல கடுகு வாய்ப்புகள்.

"டயலாக் பேசுற வாய்ப்பு கூட கிடைச்சுருக்குங்க..." என்கிறார் பவுன்ராஜ்.

"முதல் டயலாக் என்ன...?"

"டபுள் மீனிங் டயலாக்... வேண்டாமே!"

"அப்படிப் பேச வேண்டியிருந்ததில் வருத்தம் இல்லையா?"

"இல்லைங்க அதெல்லாம் இல்லை. ஆனால் எனக்கு இன்னும் சரியான பிரேக் கிடைக்கலை. அதுக்குத்தான் காத்துக்கிட்டிருக்கேன்..."

சொல்லும் பவுன்ராஜுக்கு வயது அறுபது! துணை நடிகராகவே தொடர்ந்து இருந்து விட்டார். இன்றைக்கும் சென்னை சினிமா கம்பெனிகளில் தினம் சுற்றி வந்து சான்ஸ் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

அதிகாலையில் குளித்து, சாப்பிட்டுவிட்டு சைக்கிளை எடுத்துக் கொண்டு, இனம்பினாரானால், தெரிந்த, தெரியாத டைரக்டர்கள், டைரக்டராகப் போகிறவர்கள் என்று ஒவ்வொருவராய்ப் பார்த்து வாய்ப்புக் கேட்கிறார்.

துணை நடிகர் சங்க உறுப்பினராக வில்லை. அதனால் பவுன்ராஜுக்கு உறுப்பினர் கார்டும் அதற்குரிய முறையான வாய்ப்பும் சம்பளமும் கிடையாது. கிடைத்த நாளில் கிடைத்த ரோல் செய்து கிடைத்த பணத்தை வாங்கிக் கொள்ள வேண்டும்.

ஒரு நாள் வேலைக்கு இவர் வாங்கியுள்ள அதிகபட்ச சம்பளம் நூறு ரூபாய். அபூர்வமாய் 'வேலுச்சாமி' பட வாய்ப்பு போல் தொடர்ந்து முப்பத்திரண்டு நாட்கள் வேலை கிடைக்கும். களையாய் 3200 ரூபாய் பார்க்கலாம். ஆனால் பெரும்பாலான சமயங்களில் மாதத்துக்கு நாலைந்து நான்தான் வேலை கிடைக்கும். அதிலும் சில நாட்கள் வெறும் சாப்பாடு மட்டுமே ஊதியம்!

"பரவாயில்லைங்க! சினிமா அப்படித்தான்னு தெரியும்! நம்ம முகம் ஸ்கிரீன்ல வருதுங்களே, அதுதாங்க எனக்குத் தேவை. தொடர்ந்து ஸ்க்ரீன்ல மூஞ்சியைப் பார்க்கணும்" என்று சமாதானம் செய்து கொள்கிறார்.

"பெயர் சொல்ற மாதிரி ஒரு காரெக்டர் செய்யணும்" என்கிற ஆசையும் இருக்கிறது பவுன் ராஜுக்கு.

டைரக்டர் தியாகராஜன் செய்த உதவியும், சரத்குமார் தரும் ஆதரவும் ரஜினியுடன் போட்டோ பிடித்துக் கொண்டது போல் பல சின்னச் சின்ன சந்தோஷங்களும் மனத்தை நிறைத்து விடுகின்றனவாம்.

பவுன்ராஜுக்கு இரண்டு பையன்கள். இருவருக்குமே சினிமா ஆசை இல்லை!

— துளசி



''ஒரு குடிகாரனைத் திருத்துகிற பொறுப்பை ஒரு இருபது வயதுப் பெண்ணிடம் தருகிற மாதிரி....''

''மெதுவாப் பேசு லதா...''

''தெரியும் ஜி.எஸ்.! நீங்களும் நானும் மனம் விட்டுப் பேசறதை நிறையப் பேர் கவனிக்கறதும் எனக்குத் தெரியும். அதற்குக் கண், காது ஒட்ட வைத்து, கதை பேசுவதும் எனக்குத் தெரியும்.''

''தெரிந்துமா நீ என் கிட்டே நிறைய பேசறே... இது ஆபத்தானது லதா...''

''இவங்க ஹெட்கிளார்க் மனைவின்ன உடனே ஒரு நாற்பது வயசு அம்மாவை - கண்ணாடி போட்டு, குண்டா ஒரு வயதான பரிதாப தோற்றத்தோட எதிர் பார்த்து இருப்பாங்க. இப்படி முப்பது வயசுல ஒல்லியா வெள்ளை நிறத்தோட ஒரு பொண்ணை எதிர்பார்த்திருக்க மாட்டாங்க...'' என்றாள்.

''நானே கூட எதிர்பார்க்க வில்லை லதா'' என்றான் ஜி.எஸ்.

முதலில் வேலை கற்றுக் கொள்ள ஜி.எஸ்.ஸிடம் வந்த

# அரும்

போதே அவனது நேரான பார்வையும், தடுமாறாத பேச்சும் மெல்லிய நகைச் சுவை உணர்ச்சியும் அவளை வியக்க வைத்தன.

மதிய நேரம் மற்றவர்கள் சாப்பாட்டிற் குப் பின், நடிகர் - நடிகை உறவைப் பற்றியோ, புதிய படத்தின் கதை பற்றியோ அரட்டை அடிக்கும் பொழுது, அவன் 'இண்டியா டுடே' படித்துக் கொண்டிருப்பான்.

''ஏன் ஜி.எஸ். எல்லா நேரமும் சீரியஸான சிந்தனைதானா?''

''............''

புன்னகைதான் பதிலாக வரும். அதுதான் ஜி.எஸ்.!

பிரச்னையின் முழு பரிமாணத்தையும் புரிந்து கொண்டு அக்குவேறு, ஆணிவேறாக

''குடிகாரன் என்று தெரிந்துதான் கல்யாணம் பண்ணிக் கொடுத்தார்கள் ஜி.எஸ்.! நான் படிக்க வேண்டும்; இந்தத் திருமணத்தில் இஷ்டமில்லை என்று சொன்ன பின்பும் கட்டாயப்படுத்தி கல்யாணத்தை நடத்தினார்கள்....'' லதா கொஞ்சம் கோபத்துடன் பேசினாள்.

''எல்லா பெற்றோர்களும் படற அவசரம்தான். வயது வந்த பெண் ஆர்.டி.எக்ஸ் மாதிரி...'' ஜி. எஸ். வருத்தம் கலந்த சிரிப்புடன் சொன்னான்.

# ம் உறவுகள்

**நா. நாகராஜன்**

அலகும் ஜி.எஸ். உணர்வுபூர்வமாகச் சிந்திக் காமல் அறிவுபூர்வமாக வாதிடும் ஜி. எஸ். நிச்சயம் வித்தியாசமானவன்தான்.

"ஒரு ஆண் துணை இழந்து போனா உடனே ஒரு பெண்ணைக் கல்யாணம் பண் ணிக்கச் சொல்ற சமூகம், ஒரு பெண் தன் மன ஆறுதலுக்கு ஒரு ஆணோட பழகினா ஏன் தப்பா நினைக்குது ஜி.எஸ்.?"

"அதுதான் ஆண்களின் உலகம். யாரும் - பொதுவா எதையும் சிந்திக்கறது இல்லே. தங்களை விலக்கி வைத்து, நியாயத்தை மட்டும் இவர்களால் சிந்திக்கத் தெரியாது..."

ஒருநாள் லதா வரவில்லையென்றால் ஆபீசே வெறிச்சோடிப் போனது போல இருக்கிறது ஜி.எஸ்.ஸுக்கு.

லதாவுக்கும் அப்படித்தான்.

ஜி.எஸ். இலக்கிய முகாம் அது. இது என்று இரண்டு மூன்று நாட்கள் லீவு எடுக் கும் பொழுது போரடிக்கிறது.

"நானும் உங்க கூட வரவா ஜி.எஸ்.?"

"ஐயோ அப்புறம் உன் ஏழு வயதுப் பெண்ணை என்ன செய்ய முடியும்?" என்பான் ஜி.எஸ். மறுப் பில் அவனுக்கும் வருத்தம் இருப்பது தெரியும்.

ஆபீஸ் பியூன் வீட்டு கிரஹப்பிரவேசத்திற்கு பஸ்ஸிற்கு காத்திருந்து பிறகு லேட்டாக ஜி.எஸ்.ஸின் பைக்கில் போனது பிரச்னையானது.

"எப்படி உரிமையோட வர்றா பாரு...!"

"கணவனை சமீபத்துல இழந்தவ இந்த மாதிரி ஃபங்ஷனை அவாய்ட் பண்ண ணும்னு தெரியாதா?"

"நாமதான் இடத்தை விசாரிக்க கால் கடுக்க நடந்து வர்றோம்..."

"போறபோக்குல ஜி.எஸ். பெரிய சீர் திருத்தவாதி ஆயிடுவார் போல... பாவம்..."

தலைக்குத் தலை விமர்சனங்கள். சாப் பிடக்கூடப் பிடிக்காமல் லதா கிளம்பினாள்.

ஃபோனிலேயே லீவைச் சொல்லி விட்டு, கட்டிலில் படுத்த போது தனிமை இருளாக அவள் மேல் பரவியது.

நாலு மணிக்கு பஸ்ஸர் அலறியது. தன்னை அறியாமலேயே உறங்கிப் போனவள் திடுக்கிட்டு விழித்தாள்.

மகள் ஸ்கூல் விட்டு வரும் நேரம் கூட இல்லை.

யாராக இருக்கும்?

வாசலுக்கு வந்தவள், ஆச்சரியப்பட்டுப் போனாள்.

"அம்மா...!"

"அம்மா... நீதானா! நம்ப முடியவில் லையே..." கூடவே தம்பியும்.

அம்மாவின் முகத்தில் இருந்த சந்தோஷம் தம்பியின் முகத்தில் இல்லை.

"என்னம்மா திடீர்னு... மகேஷுக்கு ஏதா வது வேலையா...? இண்டர்வியூவா?"

"இல்லேக்கா. உள்ளே போயி மத்ததைப் பேசலாம்...."

"சந்தோஷம் சட்டென்று மறைந்தது. அம்மா மெதுவாகப் பூத்தொடுக்கிற நிதானத் துடன் பேச ஆரம்பித்தாள். "நீ இங்கே யார் கூடவோ ஃப்ரெண்டா பழகறயாம். உங்க அப்பா ஃப்ரெண்ட் லெட்டர் எழுதி இருக் கார். அப்பாவுக்கு உன் மேல கோபம். அதான் அவர் வரலை. ஏம்மா இதெல் லாம்...?" அம்மா மேற்கொண்டு தொடர முடியாமல் கேட்டாள்.

"இது உண்மையும் இல்லே. முழுப் பொய் யும் இல்லேம்மா. எனக்குக் கல்யாணம் வேண்டாங்கற போது எனக்குப் பிடிக்காத நபருக்குக் கல்யாணம் பண்ணி வைச்சீங்க. நான் என்ன சுகத்தைக் கண் டேன்? இப்போ நல்லா வாழணுங்கற வய சும், மனசும் இருக்கறப்போ எல்லாத்தையும் இழந்தாச்சு. என்னைக் கொஞ்சமாவது உயிரோட நடமாட வைச்சிருக்கிறது அந்த நட்பு மட்டும் தான். அதையும் விடச் சொன்னா நடைப் பிணம் தான் நான்..." லதா மெதுவாகப் பேசினாள்.

தம்பி வாசலில் குழந்தையின் வரவை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தான்.

"இது வெறும் நட்புதானா?"

"ஆமாம்மா...."

"காலம் முழுக்க இப்படியே தொடருமா?"

"நிச்சயம் இல்லே..."

"என்னம்மா பேசறே?"

"இல்லே இந்த சமூகம் பண்ற கிண்ட லையும் கேலியையும் பார்த்தா இப்படி நட்

பாக் கூட இருக்க முடியாதுன்னு நினைக்கறேன்..."

"..............."

"ஏம்மா எனக்கு இன்னொரு வாழ்க்கை அமைச்சுண்டா தப்பா?"

"இல்லே. ஆனா நம்மள்ல அது வழக்கம் இல்லே..."

"புருஷன் போனதுக்கப்புறம் ஒரு ஆபீஸ் போய் வேலை செய்யறது மட்டும் நம்ம வழக்கத்துல உண்டா?"

"நல்லா வாதாடற லதா. யார் சொல்லித் தந்தா?"

"அவர்தாம்மா.... ஜி.எஸ்."

அம்மா பிறகு பேசவில்லை.

மது - மகள் - வந்ததும் வீடு களை கட்டியது.

ஃபைவ் ஸ்டார் சாக்லேட்டும், அம்மாவின் பலாக்காய் வறுவலும் மதுவின் ஆர்ப்பாட்டமான சிரிப்புமாக மாலை நேரம் நழுவியதே தெரியவில்லை.

"பெண் குழந்தையை வேற வைச்சிருக்கே லதா. யோசி. சடார்னு அவ பெரியவளா ஆயிடுவா..."

"அம்மா நான் நாளைக்கே ஜி.எஸ்.ஸைக் கல்யாணம் பண்ணிக்கப் போறதில்லே."

"அதைத்தான் நான் அவசரப்படுத்தறேன் லதா. நான் இங்கே வந்ததோட நிஜ நோக்கம் உங்க அப்பாவுக்குத் தெரியாது. உனக்குப் பிடிச்சிருந்தா நேரிடையா கேட்டு, சீக்கிரம் அந்த ஜி.எஸ்.ஸையோ, பி.எஸ்.ஸையோ கல்யாணம் பண்ணிக்கோ. வாழ வேண்டிய வயசு ரெண்டு பேருக்கும். அனாவசியமா எதையாவது யோசிச்சு, யாரோ ஏதோ பேசினான்னு குழம்பி உங்க காதலை, யோசனையை, முடிவை தள்ளிப் போட்டுடாதே. இதைச் சொல்லிட்டுப் போகத்தான் அவசரமா வந்தேன். சட்டுப்புட்டுனு முடிவெடு. உன் முடிவு நல்ல முடிவா இருக்கட்டும்...."

அம்மா போய் ரொம்ப நேரம் ஆன பின்னாலும் அம்மாவின் குரல் காதிலேயே ஒலித்துக் கொண்டிருந்தது.

எவ்வளவு மென்மையான மனசு அம்மாவுக்கு.

இந்த முடிவை எடுக்க எவ்வளவு போராடி இருக்க வேண்டும் மனத்திற்குள்.

'நல்ல தெளிவைத் தந்ததற்கு நன்றிம்மா...'

புது இரவுக்கு நிலா தன் உலாவைத் தொடங்கி இருந்தது.

---

# பணம் பண்ணலாம் வாங்க!

வி. கோபாலன்



சிவாமணியின் வாய்க்குச் சர்க்கரை போட வேண்டும்! 'பணம் செலவழிக்கலாம் வாங்க'ன்னு போன வாரம் ஜோக் அடித்தார் இல்லையா...! நமது அரசாங்கம் அதைத்தான் கண்மூடித்தனமாகச் செய்து கொண்டிருக்கிறது. அதனால்தான் அரசு வருவாயில் 55 சதவிகிதம் வட்டி செலுத்துவதற்கு மட்டுமே சரியாய்ப் போய் விடுகிறது! போன வருடம் 5,58,421 கோடி ரூபாயாக இருந்த அரசின் கடன் இந்த வருடம் 6,33,421 கோடி ரூபாயாக உயர்ந்துள்ளது!

இப்படி கடனும் அதற்குரிய வட்டியும் ஏறிக் கொண்டே போவதால் புதிய திட்டங்களில் முதலீடு செய்வதற்குப் போதுமான தொகை மிஞ்சுவதே மில்லை என்று நம் நாட்டின் CAG (controller and Auditor General) தலைமை தணிக்கை அதிகாரி தமது அறிக்கையில் எச்சரித் திருக்கிறார்.

ஆனால், எல்லாமே செவிடன் காதில் ஊதிய சங்காகத்தான் போய்க் கொண்டிருக்கிறது.

அரசுதான் செலவாளியாக இருக்கிறதென்றால் நாமாவது கொஞ்சம் சிக்கனம் கடைப்பிடித்து, சேமிக்கும் பணத்தை உருப்படியாக முதலீடு செய்வோம்.

சில வாரங்களுக்கு முன் ஐ.டி.பி.ஐ.யின் பங்குகளைச் சிபாரிசு செய்தேன். தேசிய மயமான வங்கிகள் சில, பங்கு மார்க்கெட்டுக்கு வர இருப்பதையும் குறிப்பிட்டேன். ஆனால் மார்க்கெட் மிகவும் இறங்கு முகமாக இருப்பதைக் கண்டு இந்த வங்கிகள் பங்கு வெளியீட்டை ஒத்திப் போட்டு விட்டன.

ஒரு நல்ல செய்தி என்னவெனில், பெட்ரோலியம் அமைச்சகம் இந்தியாவின் மூன்று முன்னணி நிறுவனங்களுக்குப் பங்குகள் வெளியிட அனுமதி தந்திருக்கிறது : Oil India Limited, Oil and Natural Gas Commission மற்றும் Indian Oil Corporation.

இந்த நிறுவனங்களுக்கு நல்ல எதிர்காலம் இருக்கும். காரணம், இந்தியச் சாலைகளில் வாகனங்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருகிறது.

புதிய பொருளாதாரக் கொள்கையின் அடிப்படையில் பல அயல்நாட்டுக் கார் உற்பத்தி நிறுவனங்கள் இந்தியாவுக்குள் நுழைய அனுமதி வழங்கப்பட்டுள்ளது. எனவே சாலையில் வாகனங்களின் எண்ணிக்கை மேலும் அதிகரிக்கும். பெட்ரோலியம் துறையும் சக்கை போடு போடும்!

மேற்படி நிறுவனங்கள் தங்கள் பங்குகளுக்கான ப்ரீமியம் தொகையைத் தெரிவித்த பிறகு மீண்டும் அவை பற்றி நினைவூட்டுகிறேன்.

இப்போது முதலீட்டுக்குச் சிபாரிசு செய்யக்கூடிய இரு நிறுவனங்கள் :

### Sterling Flatwares Limited, New Delhi

எவர்சில்வர் ஸ்பூன், முள் கரண்டி போன்றவற்றைத் தயாரிக்கும் நிறுவனம். வருடம்தோறும் 3,50,000 டஜன் உருப்படிகளை உற்பத்தி செய்யும் திறன் பெற்றது. முக்கால்வாசிக்கும் அதிகமான உற்பத்தி நெதர்லண்ட்ஸுக்கும் இதர மேற்கத்திய நாடுகளுக்கும் ஏற்றுமதியாகிறது. 1410 லட்சம் ரூபாய்க்கான விஸ்தரிப்புத் திட்டத்தில் 363 லட்சம் ரூபாய் மதிப்புள்ள பங்குகள் பொது மக்களிடம் விற்பனைக்கு வரும். ஏற்றுமதி நிறுவனம், அந்நிய நாட்டுடன் கூட்டு முயற்சி, ஷேர்கள் ப்ரீமியமின்றி தரப்படுகின்றன - என்ற மூன்று காரணங்களுக்காக இதில் முதலீடு செய்யலாம்.

### Sandur Laminates Limited, Sandur

பெல்லாரியிலுள்ள சாந்தூர் என்னும் இடத்தில் இருக்கிறது இந்த நிறுவனம். இதன் உற்பத்தி மொத்தத்தையும் அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு ஓர் அமெரிக்க நிறுவனம் வாங்கிக் கொள்வதாக ஒப்பந்தம் இருக்கிறது. IDBI, IFCI போன்ற பெரிய நிதி நிறுவனங்களின் உதவியும், 'ஆசி'யும் பெற்று பங்கு மார்க்கெட்டுக்கு வருகிறது. சுமார் 11.12 கோடி ரூபாய் மதிப்புக்கு ஷேர்கள் வெளியிடுவதாக இருக்கிறார்கள். ப்ரீமியம் பத்து ரூபாய் என்பதால் ஒரு ஷேர் இருபது ரூபாய் கொடுத்து வாங்க வேண்டும். Sandur Manganese and Iron Ores Ltd என்ற பிரபல கனிம நிறுவனத்தின் கிளைக் கம்பெனி இது என்பதால் நம்பகமானதாய் இருக்கும்.

மேற்கண்ட இரு நிறுவனங்களும் ஆகஸ்ட் மாதத்தில் பங்கு மார்க்கெட்டுக்கு வர இருக்கின்றன.

(பணம் பெருகும்)

வட்டமேஜை

# இப்படியும் ஓர் உபயோகமா?

♦ 'இதுக்குத்தாண்டா ஆளுநர்' என்ற தலையங்கம் படித்தேன். உ.பி. ஆளுநர் செய்கை மற்ற மாநில ஆளுநர்களுக்கு நல்லதொரு முன்னுதாரணமாகத் திகழ்கின்றது. ஆளுங்கட்சியின் அராஜகம், அதிகாரம், ஆணவம் ஆகியவை வலுக்கும் பொழுது அப்பாவி மக்களுக்கு ஆளுநர் என்றொருவர் இருக்கின்றார் என்பதே பெரும் ஆறுதலைத் தரும். அதேபோல ஆளுநருடன் கூடிக் குலாவினாலும் முகத்தைத் திருப்பிக் கொண்டாலும் ஆளுங்கட்சிக்கு ஆளுநர் என்றைக்குமே சிம்ம சொப்பனமாகத் திகழ்வார். திகழ வேண்டும். அதுவே ஜனநாயகத்திற்கு நல்லது.

திருச்சுழி, சுந்தர் அழகேசன்.

♦ 'தட்டிக் கேட்க நாங்க இருக்கோம்' தலையங்கம் படித்ததும் மனதில் 'அப்பாடா' என்றொரு நிம்மதி ஏற்பட்டது. தலையங்கத்தின் கடைசி வரிகளைப் படித்தாவது 'ஜெ' மௌனத்தைக் கலைப்பாரா...?

திருப்பூர், எஸ். ரமேஷ்குமார்.

♦ கார்ட்டூன் பார்த்தேன். இதுவரை நீதிமன்றத் தீர்ப்புகளைக் குப்பைக் கூடையில் கிழித்துப் போடுகிறார்கள் என்றல்லவோ எண்ணிக் கொண்டிருந்தோம்! அட, அவற்றுக்கு இப்படி ஒரு உபயோகம் இருக்கிறதா? பேஷ்! பேஷ்! ரொம்ப ரொம்ப நன்னா இருக்கு!

அரக்கோணம், எல். கோபாலகிருஷ்ணன்.

♦ நாசரின் பேட்டியில் "வெட்டப்பட்ட காட்சி" பெட்டிச் செய்தி படித்தேன். அது விநியோகஸ்தர்களின் கைங்கர்யத்தில்தான் வெட்டப்பட்டது என்றாலும் பழி என்னவோ பொது மக்களாகிய நம் தலையில்தான் விழுகிறது. அதற்காகவாவது நாம் தரமான திரைப்படங்களைத் தேர்வு செய்து பார்த்து ஆதரவளிக்க வேண்டும். ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. "மோசமான ஆட்சியாளர்கள் நல்லவர்களால் தேர்வு செய்யப்படுகிறார்கள், அவர்கள் வாக்களிக்காத காரணத்தால்!

கீழ்நத்தம், தி.க. பாலசுப்பிரமணியன்.

## ரூ. 20பரிசு பெறும் சிறப்புக் கடிதம்.

**♦ அபரிமிதமான மெஜாரிட்டியுடன் பதவியேற்ற வேளையில் 'சட்டசபையில் எதிர்க்கட்சிகள் பலமாக இல்லையே'– என்று ஆதங்கப்பட்ட பத்திரிகையாளர்களிடம், 'பத்திரிகையாளர்களே சிறந்த எதிர்க்கட்சிகளாகச் செயல்பட முடியும்' என்று சுட்டிக் காட்டி வியக்க வைத்த ஜெயலலிதா எங்கே? இன்று தம்மை எதிர்ப்பவர்களை மட்டுமல்லாது, தொழில் ரீதியாக எதிர்ப்பவர்களுக்கு உதவுபவர்களையும் அடியாட்களைக் கொண்டு துவம்சம் பண்ணும் அளவு தறி கெட்டுப் போய் விட்ட அவரது ஆட்சியின் அராஜகம் எங்கே? அராஜக செயல்களை தட்டிக்கேட்கும் எதிர்க்கட்சிகளாக நீதி தேவதை செயல்படுவது மனதுக்கு ஆறுதல் தருகிறது. அவற்றின் தீர்ப்புகளை இன்று ஜெயலலிதா கண்டு கொள்ளாமல் அலட்சியப்படுத்தினாலும், அவற்றிற்கு அவர் பதில் சொல்ல வேண்டிய கட்டாயம் ஏற்படும் காலம் வெகு தொலைவில் இல்லை.**

**பவித்ரமாணிக்கம், ஆர். பாஸ்கரன்.**

♦ உள்ளம் கவரும் வண்ண வண்ண கிரானைட் கற்களைப் பற்றி விரிவாக விளக்கமளித்துள்ளது கட்டுரை! வீரமணியின் முயற்சிகளும் சாதனைகளும் பெருமை கொள்ளச் செய்கின்றன!

கும்பகோணம், கே.என். பாலகிருஷ்ணன்.

♦ 'போறாளே பொன்னுத் தாயி' பாடலுக்கு தேசிய விருது பெற்ற சினிமா பின்னணிப் பாடகி சுவர்ணலதாவின் பேட்டியை உரிய நேரத்தில் வெளியிட்ட கல்கிக்குப் பாராட்டுக்கள்! சிக்கலான கேள்விகளுக்கும் சிரமமின்றி பதிலளித்த அவருடைய புத்திசாலித்தனத்தையும் புரிந்து கொள்ள முடிந்தது.

திருச்சி-5, தமிழ்தாசன்.

♦ ரிஷபனின் 'பூஞ்சிறகு' படித்தேன். புஷ்பாவின் நடவடிக்கைகளால் 'காதலாகி', லட்சியத்திற்காகப் பிரிந்தவுடன் அவள் நினைவாலேயே 'கசிந்து உருகி', புஷ்பாவின் மறைவால் 'கண்ணீர் மல்கி' நிற்கும் பாடலின் நிலை, நெஞ்சை உருக்கி விட்டது. இரு பக்கங்களில் ஒரு இனிமையான கதை. பாராட்டுக்கள்.

காட்பாடி, அ.சோ. விஸ்வநாதன்,

♦ 'ஒரு துளி துக்கம்' படித்தேன். இவைதாம் பெண்ணின் மன உணர்வுகள் என்று கூறி அவற்றைச் சிறுகதை என்ற குங்குமச் சிமிழில் நிரப்பி, வாசகர்கள் கரங்களில் தந்திருக்கிறார் உமா ஜானகிராமன். கதையில் ஆங்காங்கே கவித்துவம் அநாயாசமாய்த் தெறிக்கிறது. பாராட்டுக்கள்!

ஸ்ரீரங்கம், சௌரிராஜன் ராஜேஷ்.

♦ 'சாம்பல் பூத்த மலர்' படித்தேன். பன்னிரண்டு வயதில் வரலாறு படைத்த– எதிர் நீச்சல் போட்ட 'குலாப்' அல்லவா பாரதி கண்ட புதுமைப் பெண்!

கும்பகோணம், டி.எஸ். சீதாராமன்.

●● மத்திய அரசின் நிதி உதவியுடன் சிறப்பாக இயங்கும் ஒரு மருத்துவ மனையின் பின்புறம் உள்ள குப்பைக் குவியலிலிருந்து சில கடைநிலை ஊழியர்களின் உதவியோடு ஒருவன் சில பொருள்களைச் சேக ரித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். ஒரு முறை பயன்படுத்தி டாக்டர்கள் எறிந்துவிடும் கையுறைகள், இன் ஜெக்ஷன் ஸிரிஞ்சுகள் போன்றவை. இவை 'சுத்தம்' செய்யப் பட்டு மறுபடி "பாக்கிங்" ஆகி கொள்ளை லாபத்துக்கு விற்கப்பட் டால் வியப்பில்லை. அதைவிட ஆபத்து, இதனால் பரவக் கூடிய நோய்கள். எனவே, மருத்துவமனைகளில் இவற்றை உடைத்து அல்லது கிழித்துத்தான் குப்பையில் சேர்க்க வேண்டும். செய்வதில்லையே!

சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

●● பெங்களூர், ஜெயநகரில் உள்ள ஒரு ஓட்டலில் ராகிதோசை கொடுக்கிறார் கள். சர்க்கரை வியாதி உள்ள நான் அதைச் சாப்பிட்டு மகிழ்ந்தேன். இதை எல்லா ஓட்டல்களிலும் ஒரு ஐட்டமாகத் தயாரிக்கலாமே? சர்க்கரை வியாதி இல்லாதவர்கள் கூட பலர் ருசித்து உண்பார்கள்!

சிவகங்கை, வெ.ர. நாகராஜன்.

●● அரசு ஊழியர் இறந்தால் அவர் குடும்பத்தில் ஒருவருக்கு கருணை அடிப்படையில் வேலை தருவதை தற்போது தமிழக அரசு நிறுத்தி வைத்துள்ளது. எத்தனையோ ஊதாரி செலவுகள் கண்ணில் படவில்லையா அரசுக்கு? குடும்பத் தலைவன் அல்லது தலைவியை இழந்து நிர்க்கதியாய் இருக்கும் குடும்பங்களின் தலையில்தான் கை வைக்க வேண்டுமா?

தஞ்சாவூர், வெ. முருகானந்தம்.

●● சென்னை சென்ட்ரல் நிலையத்தில் நாம் ரயிலை விட்டு இறங்கியதும் இறங்காததுமாக ஒரு சிறுவர் கும்பல் உள்ளே ஏறுகிறது. நாம் பிளாட்ஃபாரத்தில் பெட்டியை வைத்துவிட்டு, இரண்டாவது நடையில் எடுத்து வரலாம் என்று விட்டு வைக்கிற பொருள்களை 'அபேஸ்' செய்து கொண்டு போய் விடுகிறது. பிளாட்ஃபாரங்களில் அனுமதி இன்றித் திரிவோரை வளைத்துப் பிடிக்கக் கூடாதா?

சென்னை-49, எஸ். இராமநாதன்.

●● ஜூன் பத்தாம்தேதி கபாலீஸ்வரர் கோயிலில் சனி பிரதோஷ விழாவுக்குச் சென் றிருந்தேன். வழக்கமாகக் காலணி பாதுகாப்புக்கு 25 பைசாதான். அன்று கட்டுக்கடங்காத கும்பலைச் சாக்கிட்டு ஒரு ரூபாய் கறந்து விட்டார்கள். ஆலய வாசலிலேயே இப்படி ஒரு அக்கிரமமா?

சென்னை-91, டி.என். பாலகிருஷ்ணன்.

●● எத்தனை ஸாடிலைட் சானல்கள் வந்தாலும் மிக அதிகமான நபர்களால் பார்க்கப்படுவது தூர்தர்ஷன்-1 தான். காரணம், ஸாடிலைட் சானலுக்கு அட்வான்ஸ் ரூ.300ம் தவிர மாதம் ரூ. 60ம் தர முடியாதவர்களே அதிகம். அப்படியிருக்க, கிரா மங்களைச் சேர்ந்த ஏழை மக்கள் விரும்பாத அளவில் மணிக்கணக்கில் டென் னிஸ், கிரிக்கெட் நிகழ்ச்சிகளை ஒளிபரப்பி தூர்தர்ஷன் வெறுப்பூட்டுகிறதே!

திருச்சுழி, சுந்தர் அழகேசன்.

●● அருள்மிகு வள்ளலார் உயர்நிலைப் பள்ளியில் மூன்று ஆண்டுகளாக ஊதியம் இன்றி வேலை செய்தோம். "அரசு மானியம் வரவில்லை; வந்தால் தந்துவிடுகிறோம்" என்றார்கள். அரசுமானியம் வந்துவிட் டது. நாங்கள் கண்ட பலன், பணி நீக்கம் செய்யப்பட்டதுதான்! தற்போது ஏழு பேர் பணி நீக்கம் செய்யப்பட்டுள்ளனர். 1990 முதல் மொத்தம் பதினைந்து பேர் வேலை இழந்து உள்ள னர். இனி புதிதாக நியமிக்கப்படக் கூடியவர்களுக் கும் எங்களுக்கு நேர்ந்த கதி ஏற்படாது என்பது என்ன நிச்சயம்? எச்சரிக்கை செய்கிறோம்.

குறிஞ்சிப்பாடி, வி. முத்துக்குமரன் மற்றும் ஆறு பேர்.

## நீங்கள் கேட்டவை - தராசு

● வீ. வீரய்யன், வேலூர்.

*? லஞ்ச ஒழிப்புத் துறை என்று ஒன்று இருக்கிறதா?*

! ஏன்? அதில் ஏதாவது போஸ்ட் கிடைக்குமான்னு பார்க்கறீங்களா? எத்தனை தள்ளுவீங்க?

● மணிகுத்ரா, நாகர்கோயில்.

*? CNN முதல் ஒளிபரப்பிலேயே பாதி காஷ்மீர் பாகிஸ்தானில் இருப்பதாகவும் பம்பாய் சாலைகளில் மாடுகள் அலைவதாகவும் காட்டியுள்ளது பற்றி...?*

! இதுக்குத்தான் அயல்நாட்டு டீவி இங்கு அனுமதிக்கப்பட்டாலும் அதன் தலைமை இந்தியத் தலைமையாக இருக்க வேண்டும் என்பது. அப்போது இம்மாதிரி அனுசிதமான காரியங்கள் நடக்காது. சொல்கிற விஷயங்கள் பல உண்மையாக இருந்தாலும் அதைச் சொல்ல வேண்டிய காலத்தில் கூற வேண்டிய முறையில் கையாள வேண்டும். இல்லாவிட்டால் மனங்கள் புண்பட, எதிர்ப்புக் கிளம்புவது இயல்பே.

தில் உள்ள மற்ற இரு எலக்ஷன் கமிஷனர்களையும் புறக்கணித்து விட்டு, தெ. டுவிடம் பொறுப்புக்களை ஒப்படைத்து விட்டுப் போகவில்லையா? அது போல!

● மஞ்சுதேவன், பம்பாய்.

*? ISO 9000 போன்று பத்திரிகைகளுக்கும் வருமா?*

! அச்சமைப்பு, அச்சு நேர்த்தி முதலியவற்றுக்குச் சான்று தந்தால் போதாது; உள்ளடக்கத்தின் தரத்தை எடை போட்டுச் சொல்ல முன்வர வேண்டும். செய்வார்களோ? அதற்குப் பத்திரிகைகள் சம்மதிக்குமோ?

● ரம்யாம்மா, நெய்வேலி.

*? சுடச்சுட ஒரு செய்தி சொல்லுங்களேன்!*

! எல்லோரும் வெள்ளி விழா கொண்டாடுவதுதான் வழக்கம். ஆனால் எமெர்ஜென்ஸி பிரகடனமாகி இருபதாம் ஆண்டை நிறைய பத்திரிகைகள் நினைவூட்டி கட்டுரைகள் வெளியிட்டு உள்ளன. காரணம்? இந்திரா குடும்பத்தினரின் செல்வாக்கைக் குறைப்பது.

# ஜெயலலிதாவின் தற்போதைய கவலை எது?



• தற்போதைய கவலை?

● கே. கே. வேங்கடேசன், வேலூர்.

*? வை.கோ. கடந்த ஆண்டில் 'ஆட்சியைப் பிடிக்கவோ பதவி வேண்டியோ நாங்கள் இயக்கத்தை ஆரம்பிக்கவில்லை' என்றார். இன்று 'தமிழக ஆட்சியைப் பிடிப்போம்' என்கிறாரே?*

! 'பதவி ஒரு பொருட்டல்ல' என்னும் அரசியல்வாதிகளின் பேச்சையெல்லாம் அப்படி அப்படியே நீங்கள் நம்பிவிடுவீர்கள் என்று அவர் எதிர்பார்த்திருக்க மாட்டார்!

● இர. ரூபன், கோபாலசமுத்திரம்.

*? சேஷன் விளம்பர சினிமாவில் நடித்ததை சு. சுவாமி எதிர்த்துள்ளாரே?*

! அது விளம்பர சினிமாவில் நடிப்பதாகச் சொல்லி நடிப்பது; மற்ற பல காரியங்கள் தனக்கு விளம்பரம் தேடிக் கொள்வதற்காகச் செய்வது. இப்போ இரண்டு மாத லீவில் அமெரிக்கா போகும் போது சம அந்தஸ்

வருகிற தேர்தலில் பலனளிக்கும் என்று பிரதமரின் ஆலோசகர்கள் கருதியது தானாம்!

● எஸ். ரோஜா, நாட்டரசன்கோட்டை. □

*? சசியின் பிரட்டலின்றித் தத்து எடுப்பது என்றால் ஜெ. தொட்டில் குழந்தை ஒன்றைத் தத்து எடுத்திருக்கலாமே?*

! தத்து எடுப்பது, மனிதாபிமான நோக்கிலா, பாசத்தின் பேரிலா, சொத்தைப் பாதுகாக்கவா என்பதைப் பொறுத்துத்தான் தேர்வு நடைபெறும்.

● தி.சி. ஆனந்தகுமார், திருவெண்ணெய்நல்லூர்.

*? எஸ்.ஏ.பி. குமுதம், சுஜாதா' குமுதம், மாலன் குமுதம் - ஒப்பிடுக.*

! குமுதம்; குமு-தம்; குமுத-ம்ம்ம்....



• குமுதம்...



• குமுதம்...



• குமுதம் ...ஒப்பிடுக

● மா. பழனிசாமி, கோவை.

*? தற்கொலையால் 13 பேர், வாகன விபத்தில் 16 குழந்தைகள் மரணம். - இரண்டில் மிகவும் சோகமானது எது?*

! தற்கொலை சோகமே என்றாலும், கடன் உபாதையால் நேர்ந்த அந்தத் துயரம் திட்டமிட்டு நிறைவேற்றிக் கொண்டதாகும். வாகன விபத்தோ வாழத் துடிக்கும் சிறுவர்களின் பரிதாப முடிவு. எதிர்பாராத விபத்து. எனவே சோகத்தின் சிகரம். விபத்து நேர்ந்த பிறகு இனைற்றுக்கு அரசு கவர் எடுப்பது ஆத்திரத்தைக் கிளப்புகிறது. வாகனங்களுக்கு லைசென்ஸ் வழங்குவதில் உள்ள கட்டுப்பாடுகளை லஞ்ச ஊழல் புகுந்து தளர்த்தி விடக் கூடாது என்



• 'சிலுவையில் நீதி!'



• 'விளம்பர சினிமா...!'



• 'மூக்கை நுழைத்து'



• 'ஆட்சியைப் பிடிப்போம்!'

பதை வலியுறுத்தும் பரிதாப நிகழ்ச்சி.

● எஸ். கே. மூர்த்தி, கும்பகோணம்.

*? ஜெயலலிதாவின் தற்போதைய கவலை எது?*

! டு பாண்ட் நைலான் தொழிலகத்தை சு. சுவாமி மூக்கை நுழைத்து உருவாகாமல் தடுத்து விடப் போகிறாரே, என்பதுதான். சுற்றுச்சூழலுக்கு மாசு மட்டுமல்ல; அக்கம்பக்கம் வாழும் மக்களுக்கும் ஆபத்து என்றல்லவா அச்சுறுத்துகிறார் சுவாமி!

● எல். எம். அபிநாட்சயா, மதுரை.

*? அ.தி.மு.க. அரசின் நான்கு வருட சாதனைகளில் மிகவும் வியக்க வைத்தது எது?*

! மின்வாரியத்தின் நிலக்கரி இறக்குமதி தொடர்பாக, நீதிமன்றம்; விசாரணை கமிஷன் எல்லாவற்றையும் டபாய்த்துக் கொண்டு மறுபடியும் பாக்ஸ் நம்பர் விலாசத்துடன் உள்ள நிறுவனங்களுக்கே நிலக்கரி இறக்குமதிக்கு ஆர்டர் கொடுத்திருப்பது தான்! 'மோசடிகளிலும் சூப்பர் மோசடி' என்று எஸ்.ஆர்.பி. அம்பலப்படுத்தியுள்ள இதனைக் குறிப்பிடலாம். இதிலெல்லாம் ஜெ. அரசை விஞ்ச யாராலும் முடியாது!

● எஸ். சாந்தி, காட்பாடி.

*? தி.மு.க.வின் ரயில் மறியல் போராட்டம்...?*

! தலைவர்களுக்கு ஒருநாள் பப்ளிசிடி; மக்களுக்கு இடையூறு. மற்றபடி போராட்டம் சாதித்தது ஒன்றுமில்லை. மக்களின் ஆதரவு பெறாத எந்தப் போராட்டமும் வெற்றி பெற முடியாது. பல்லாயிரக்கணக்கில் கைதாகி சில நாள் சிறைவாசம் அனுபவித்து மீண்டதுதான் மிச்சம்.

● ச. ஈஸ்வரன், திருச்சி.

*? 'தமிழ்நாட்டில் நீதி சிலுவையில் அடிக்கப்பட்டிருக்கிறது' என்ற நீதிபதி கிருஷ்ணய்யரின் வேதனை பற்றி...?*

! அன்னை மேரி முகத்தை நீக்கி ஜெ. முகத்தை வைத்து கட்அவுட் நிறுவிய போது பலத்த எதிர்ப்பு இருந்தும் மௌனம் சாதித்த முதல்வர், அன்னை மேரி சிலை சிதைக்கப் பட்டதற்குக் கண்டனம் தெரிவிக்கிற அவசரத்தைப் பார்க்கும் போது நீதியை அவர் சிம்மாசனத்திலா அமர்த்துகிறார்? சிலுவையில்தான் அறைகிறார்!

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
எஸ். ரோஜா,
4/10 மேலரத வீதி,
நாட்டரசன்கோட்டை
- 623 556.



• ஷ்யாம் பெனகல்



• 'மம்மூ'

# பந்தாடப்பட்ட பாட்டி!

இந்தியா–பாகிஸ்தான் பிரிவினையின்போது லாகூர்வாசி ஒருவரின் மனைவி என்ற காரணத்துக்காக, மம்மூ பாட்டி பாகிஸ்தானிய குடிமகள் ஆகிறாள். சிறிது நாட்களில் கணவன் இறந்து போக, புகுந்த வீட்டினர் தொல்லையின் உச்சகட்டமாய் தெருவுக்கு வர நேர்ந்து விடுகிறது.

பிழைக்க வழியில்லாமல், இந்தியாவில் இருக்கும் சகோதரியைக் காணப் போவதாய்க்கூறி, விசா பெற்றுக் கொண்டு துணைக்கு பத்து வயதுப் பேரனுடன் இந்தியா வருகிறாள் மம்மூ பாட்டி. விசா முடியும் போதெல்லாம் ஏதாவது ஒரு காரணம் கூறி, எக்ஸ்டென்ஷன் பெறுகிறாள்.

என்றைக்கு இருந்தாலும் நாட்டை விட்டு நம்மைத் துரத்தி விடுவார்களோ என்று தினம் தினம் பயந்து சாகிறாள் பாட்டி. ஒரு ஏஜெண்ட், இங்கே இருக்கும் அயல் நாட்டு குடிமக்கள் பட்டியலிலிருந்து மம்மூவின் பெயரையும் பேரன் காலித் பெயரையும் திருட்டுத்தனமாய் நீக்க ஏற்பாடு செய்வதாய்க் கூற, பாட்டி அதற்குச் சம்மதித்து லஞ்சம் தருகிறாள்.

சட்டத்துக்குப் புறம்பாகத் தங்கியுள்ள அயல்நாட்டினரை வெளியேற்ற முடிவு செய்கிறது அரசாங்கம். தங்கள் பெயர்கள் பட்டியலிலிருந்து நீக்கப்பட்டுவிட்ட சந்தோஷத்தில் இருக்கிறார்கள் பாட்டியும் பேரனும்.

ஆனால் அவர்கள் சந்தோஷம் நீடிக்கவில்லை. ஏஜெண்டின் ஏமாற்று வேலை வெளிப்பட்டுவிட, மம்மூபாட்டியும், பேரன் காலித்தும் கட்டாயமாய் பாகிஸ்தானுக்குத் திருப்பி அனுப்பி வைக்கப்படுகின்றனர். அங்கே, உறவினர்கள் ஏற்றுக் கொள்ளாத நிலையில், மீண்டும் வாழ்க்கை கேள்விக் குறியாகிறது.

இது 'மம்மூ' என்ற திரைப்படத்தின் கதை. தற்போது பிலிம்ஃபேர் பத்திரிகையில் சினிமா விமர்சகராக இருக்கும் காலித் முகம்மது என்பவரின் இளம் பிராயத்து நிஜ சம்பவங்கள்தான் மம்மூ படத்தின் அடிப்படை.

மனித நேயம், சகோதரத்துவம் இவற்றை மிக அற்புதமான முறையில் வெளிப்படுத்தியிருக்கிறார், மம்மூ படத்தின் இயக்குனர் ஷ்யாம் பெனகல்.

இதில் நடித்துள்ள சுரேகா சிக்ரிக்கு இவ்வாண்டின் சிறந்த துணை நடிகைக்கான விருது கிடைத்துள்ளது.

— மௌலி

நன்றி : ஸ்டார் லைஃப்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.



# T.S.S. NIDHI LTD.

ESTD 1973

THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED

Regd. Off.: 230, R.K. Mutt Road, Mylapore, Madras 600 004. ☎ 4942303 / 4943365

BRANCHES:
THIRUVANMIYUR : 112, Thiruvalluvar Salai, Kamaraj Nagar, Madras - 41. ☎ 410058
TONDIARPET : 667, T.H. Road, Madras - 81. ☎5950472
SAIDAPET : 11, Jones Road, Madras - 15. ☎ 4851468

## FIXED DEPOSIT SCHEME

| Period (Months) | 12 | 24 | 36 | 60 |
|---|---|---|---|---|
| Rate of Int. P.A. | 17% | 18% | 19% | 20% |

## KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan) For Deposit of Rs.1,000/-

| Period (Months) | 12 | 24 | 36 | 45 | 67 |
|---|---|---|---|---|---|
| Maturity Value Rs. | 1190 | 1425 | 1760 | 2025 | 3025 |

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME

Minimum Deposit Rs. 10,000/-

Period - 12 months

Interest payable monthly **19.5%** p.a.

Interest payable annually **21%** p.a.

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, REGD. EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS)

## T.S.S. SPECIAL DEPOSIT SCHEME

For Deposit of Rs.10,000/-

| Period (Months) | Maturity Value |
|---|---|
| 120 | Rs.66,000 |
| 180 | Rs.1,82,000 |

## RECURRING DEPOSIT SCHEME

MONTHLY DEPOSIT Rs. 100/-

| Period in Months | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
|---|---|---|---|---|---|---|
| Maturity Value | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

## SAVINGS DEPOSIT SCHEME 9% P.A.

## BUSINESS HOURS

| | Week Days | | Sunday | Holiday |
|---|---|---|---|---|
| Regd. Office Mylapore | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Friday |
| Branch Offices | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Tuesday |

## HIGHLIGHTS

* Recognised as a **NIDHI COMPANY** by Central Government of India.
* **Company is in 22nd year of service.**
* Transaction with members only (Rupees two only for membership)
* Premature repayment facility as per terms and conditions.
* Monthly Interest Warrants would be despatched in advance for the year of Deposits.

## LOANS

★ A) Jewel loans granted on Gold ornaments at Rs.300/- per gms. (Rs.2400/- per 8 gms.)
- ★ No Ceiling
- ★ No Charges
- ★ No Interest Tax
- ★ Recurring Deposit not required
- ★ **Your Jewels are insured at our cost.**

B) Property Mortgage Loans granted on RD basis within Madras city limits.

**P.S. SAMBASIVAM**
Secretary

**G. KUMARAVELU**
Vice-President

**K.R.V. RAMANI**
President

Registered as Newspaper in Srilanka